"THE HOME AS THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION."
"This Favourite Children's Magazine is Admirably Conducted."—**Regd.—No. M. 108.**
"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.
Vol. XXII.] **"New Series"** ஆநந்தஸூ **FEBRUARY 1915.** மாசிமீ **"Approved"** [No. 11.

# THE HOME NUMBER.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**DEVOTED TO THE DIFFUSION OF LIGHT AND KNOWLEDGE,**
**And to the "Children's Movement."**

"Hitch Your Wagon to a Star"—Emerson.

## CONTENTS.



## பொருளடக்கம்.



"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs.5
**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
Overland 8 Annas extra.] *Lalitalaya, 19, Adam St., Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.
**For the** *LALITA PUBLISHING CO.*, **Sole Agents and Managers.**
Thin Paper Edition for the people] **Regd. as a 'Book' and Copyrighted.** [Subscription Price: Yearly Rs. 4.

The page carries two advertisements.

# தேஹஸௌகம், பலம், மனோதிடம்,

ஆகிய மூன்றும் உலகத்தில் ஜீவிப்பதற்கு வேண்டிய பிரம்ப முக்கியமான குணங்களாகும், உமது தேகம் மெலிந்து நடுக்கம் கண்டால் உலககார்யங்களில் எப்படி ஸித்தியடைவீர்? திடமான தேக அமைப்பு இல்லாவிட்டால் குடும்பகார்யங்களேயும் மற்ற தொழில்களேயும் எப்படி ஸரி வரச்செய்ய முடியும்? நீர் பலமற்றிருந்தால், உம்மிடம் பராக்ரமும், சக்தியும் குறைந்து போயிருந்தால்; உமது எண்ணங்கள் நிறைவேறுவோ என்று ஏங்கியிருந்தால் தேக ஸௌகத்துக்கும் பராக்ரமத்துக்கும் வழிகாட்டும்.




## ப்ரொபஸர் ஜேம்ஸின் வித்யுத்சக்தி மாத்திரைகள்

என்னும் மருந்தை சாப்பிட்ட முதல் நாளே பலவீனம போய்விடுகிறது. தைர்யமும், பலமும், ஸௌகமும் உண்டகிறது. பசி உண்டாகிறது. ஜீர்ணசக்தி ஏற்படுகிறது. நரம்பு பலவீனத்தை ஸரிப்படுத்தி நரம்புகளுக்கு பலம் கொடுக்கிறது. நபும்ஸகத்தைப் போக்குகிறது.

25-மாத்ரைகள் கொண்ட 1-பாட்டில் 1-ரூ. 4-அணு.
40-மாத்ரைகள் கொண்ட பாட்டில் 2-ரூபாய்
வி. பி. சார்ஜ் 4-அணு.

ஆங்கிலோ இண்டியன் ட்ரக் அண்ட் கெமிகல் கம்பெனி, நெ. 16-மார்க்கட், பம்பாய்.

மதராஸ் ஏஜண்டு,

மேடா புருஷோத்தம் மூல்ஜி,

29, சைனபஜார் ரோட், பூக்கடைபக்கம், மதறஸ்.

---

## The Fascinating Perfume

# OTTO DILBAHAR. (Regd.)




## எல்லோர் மனதையும் ரமிக்கச்செய்யும்

# ஆட்டோ டில்பஹார்.

மனோரமியமாகவும், எப்பொழுதும் நீடித்தும் இருக்கும் அபூர்வ வாசனையுடையது. ஆல்கஹால், சாராயம் முதலியவைகளின் சம்பந்தமே கிடையாது. உங்கள் கைகுட்டையிலாவது சொக்காயின் புறங்களிலாவது சில துளிகள் விட்டீர்களானல் ஒரு நந்தவனத்தின் மத்தியில் இருந்தால் எவ்வளவு சுகமாய் அதன் வாசனையை அனுபவிப்பீர்களோ அவ்வளவு அனுபவிப்பீர்கள். மற்றவர்கள் வேறு எந்த ஸெண்டுகள்தான் போட்டிருந்தபொழுதிலும் இந்த ஆட்டோ டில்பஹார் எல்லாவற்றிற்கும் முன் நிற்கும்.

ஒரு புட்டிக்கு இன்று எழுதுங்கள்.

விலை ½ டிராம் புட்டி அணு 8; விலை 1 டிராம் புட்டி அணு 12.
விலை ½ அவுன்ஸ் புட்டி ரூ. 2—0—0. விலை 1 டஜன் வாசனை கார்டுகள் அணு 10.
ஆட்டோ டில்பஹார் வாசனை கார்ட்டு 0-1-0 டஜன் 1-க்கு விலை 0-10-0.

ஸோல் ஏஜண்டு, வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

ஆங்கிலோ இண்டியன் ட்ரக் அண்ட் கெமிகல் கம்பெனி., நெ. 16-மார்க்கட், பம்பாய்.

மதறாஸ் ஏஜண்டு,

மேடா புருஷோத்தம் மூல்ஜி,

29, சைனபஜார் ரோட், பூக்கடைபக்கம், மதறஸ்.

# "THE HOME AS THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




[God is Love: Knowledge is Power: *Aum* அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.]

"New Series" ஸத்தியமே ஜேயம்—**SATYAMEVA JAYATE.** "Approved"

புத்தகம். 22.] ஆனந்தஹூ மாசிமீ, 1915ஹூ பிப்ரவரிமீ [சஞ்சிகை 11


## "THE HOME AS THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION."

### PROFESSOR JOHN PERRY'S PRESIDENTIAL ADDRESS

### To the Educational Section of the British Association.

As a wholesome corrective to some current educational superstitions we may call attention, says the *Indian Social Reformer*, to Professor John Perry's presidential address to the Educational Section of the British Association this year (*in October last*). A more thorough going indictment of an educational system and its products, we have seldom come across...... He says,—

"The reforms in pedagogy which, with Dr. Armstrong, I have been clamouring for during the last thirty years, would cause the best known pedagogues to scrap all their machinery, and so to lose nearly the whole of their invested capital. Even when they are not influenced by the idea of losing money, these men cannot be made to believe in the necessity of reform any more than the Central African worshippers of hideous idols can be converted, for with just as much intensity do they worship the product of our present schools and colleges."

And what of these products ? The Professor says:—

"Every clever man who has gone to a public School and to Oxford or Cambridge worships the system which has taken from him his spiritual birth-right, his individuality, his initiative, his originality, his commonsense, his power to think for himself—yes, I may say his belief in himself. He has become too much like a sheep ready to follow the bell wether ; he is a man who has greatly lost his soul."

Of the English Public School as an educational institution Professor Perry says:— "English people know the worthlessness of the public school system in the mental training of the average boy. This worthless system continues because in some occult way it seems to have a connection with something of real importance, *public school form.* There is really no connection. It is in itself a splendid thing. The public school boy is trained in self-possession, modesty, cleanliness, truthfulness and courage. At school his health in body and morals is important. He learns to lead and to obey. But the average resulting man

is exceedingly ignorant; he neither reads nor writes, and he has little reasoning power except what his sports have developed. This form is essentially aristocratic. It is based on superiority of position, birth or caste,........ ...By prig, I mean a man who cannot get outside convention and so cannot exercise his own commonsense,............Its strength lies in convention and habit and the belief that poor people are not men but a lower kind of animal who may be pitied as we pity a suffering dog. Such pity can never raise the people or reform abuses."

Refering to the boarding School and the hostel as panacea for educational ills, the Professor remarks :—"It is one of the great advantages of poverty that children go to day-schools and they keep in touch with home life."

The *Indian Social Reformer* calls pointed attention to the prevailing tendency in India and says: "Indian educationists will do well to consider any such schemes in the light of the observations of the President of the Educational Section of the British Association quoted above.

THE HOME IS THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION.

The home, indeed is the goal and centre of Professor Perry's educational scheme, "The time is coming", he said, "when a child's own father and mother will have much more knowledge and wisdom than they have now, and they will refuse to give up to others the doing of their highest duties. It is at present not sufficiently reognised that the most important duty of the parents is the education of their children." He protests against the use of the word "character" for public school *form*, because "*character* comes from home life, not from school life, which indeed, is rather antagonistic to character." He attaches great importance to the early formation of the habit of reading. "Any boy whatever will become fond of reading if the people about him are fond of reading. I state this as a fact which I have investigated. A boy who is fond of reading gets later on to know the value of books and the use of books, and he will go on educating himself until he dies."

**"A PICTURE OF HOME-LIFE."**

("HOME:—THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION.")

*Father, Mother, Child and Teacher.*

**The Beginning of Home-Education.**

"தந்தைதாய் முதலாதியர் தாங்கள் பார்த்
திந்தவிஸ்வ ரூபங்கண்ட திசயித்
தந்தமாகிய நாமகரணஞ் செய
வந்தனர் சாற்கேய முனிவரே."—பாகவதம்.

"With the Naming of the child begins that true Education in Home-life from which comes *Character*."—




"It comes from contact with fathers and mothers, brothers and sisters, relations and riends." cf. 'குலத்தளவே யாகுமாம் குணம்.'

புஸ்தகம்-22.] [சஞ்சிகை-11
"The Children's Favourite, The Teachers' Help, And the Parents' Guide."

ஆனந்தவரு மாசிமு

# விவேக  சிந்தாமணி

February -March 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## THE HOME AS THE GOAL AND CENTRE OF TRUE EDUCATION.

*From Professor John Perry's Presidential Address to the Educational Section of the British Association.*

### வித்தியாவிலாஸ ஸாதனஸங்கம்.

"இல்லறமல்லது நல்லறமன்று."

பாலபோத ஸமஷ்டிசேவை ஸாதனம்.



சென்னையில் பாலபோத ஸமஷ்டிசேவை ஸாதநாசங்கம் ஏற்பட்டு ஊருக்குழைப்பதை "ஸமஷ்டிசேவை" தீக்ஷையாக அனுசரிக்கச் சிறுவர் பழகவேண்டுமென்று உழைத்துவருகிறது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இந்த ஏற்பாடு ஊர்ஜிதத்துக்கு வந்தது இந்தியா கவர்ன்மெண்டார் வித்தியா விஷயமாகச்செய்த தீர்மானத்தாலும், நமது அரசர் பிரதிநிதியவர்கள் அதையொட்டிச் சட்ட நிரூபணசபையில் பேசியதில் சிறுவர்களின் மனப்பழக்கமும் அதனால்வரும் குணவிசேஷமும் பெரிதேயன்றி வெறும் ஏட்டுப்படிப்பினால் பிரயோசனமில்லையென்று வித்தியா லக்ஷணத்தை உண்மையாக வெடுத்தோதியதாலும் கனம்பொருந்திய ஹார்டிஞ்ச் பெருமாட்டியவர்கள் "ஹார்டிஞ்ச் ஜயந்தி" யென்கிற பாலர் திருவிழாவையேற்படுத்தியதாலும் ஸ்திரப்பட்டு உரம்பெறலாயிற்று.

குழந்தைகள் குடும்பத்திற் பிறந்து வளர்ந்து பள்ளியிற் பழகித்தேறி உலகில் உழைக்கப் பாத்திரராகிறார்கள். இதற்கு வித்தியா விலாஸ ஸாதன ஸங்கமாயிருப்பது இல்லமே.

"இல்லறமல்லது நல்லறமன்று."

இப்படியாக, குழந்தைகளுடைய மனோவிர்த்தி, அறிவுவிர்த்திக்குக் காரணபூதமாயுள்ள ஸ்தாபனங்கள் மூன்றுள. அவை:—

வித்தியாவிலாஸ ஸாதனங்கள்.

(1) குடும்பம்; (2) பள்ளிப்பழக்கம்; (3) ஜனசமூகம் அல்லது உலகம். இவைமூன்றும் திரிகுணாத்மகமானதாயிருப்பினும் உண்மையில் ஒருதன்மையனவாயிருக்கும். எப்படியெனில் எடுத்துச்சொல்கிறேன் கேளுங்கள்:—

(1) குடும்பம்: ஒரு வித்தியாவிலாஸ ஸாதனம். முதலாவது குடும்பம் என்பது தந்தை தாய் உடன்பிறப்புச் சுற்றம் என நால்வகை லக்ஷணங்களோடு கூடியதாயிருக்கிறது. இந்த நான்கு லக்ஷணங்களில் ஒன்று குறைந்தாலும் அது குடும்பலக்ஷணத்துக்குப் பங்கம் விளைப்பதாகும்.

தந்தையில்லாத குடும்பம் தலையில்லாத முண்டத்துக்குச் சமானமாகும்.

தாயில்லாத குடும்பம் மழையில்லாது வரண்ட பூமிக்குச் சமானமாய் செழிப்புக்குன்றி வரட்டுத்தரைபோல் காய்ந்து உலர்ந்து வெடிச்சென்று காடு தட்டிப்போகும்.

உடன் பிறப்பில்லாத குடும்பம் "ஒற்றை மரம் தோப்பாமா?" என்றதுபோல் குடும்ப லக்ஷணம் பொருந்தியதாகாது.

சுற்றமில்லாத குடும்பம் மாங்கல்யமிழந்த மங்கைபோல் நலமிழந்து சீலங்குன்றிச் சிதைந்துபோம்.

ஆகையால் இந்த நாலு அங்கமும் நல்ல குடும்பத்துக்கு இன்றியமையாத லக்ஷணங்களாம். இந்த லக்ஷணங்கள் பூரணமாகப் பொருந்தி யிருந்தால்தான் குடும்ப லக்ஷியம் (The Family Ideal) நிறைவெய்தலாகும். இல்லாவிடில் லக்ஷியம் குன்றிப்போம்.

(2) பள்ளிப்பழக்கம்: ஒரு வித்தியா விலாஸ ஸாதனம்.

இரண்டாவதான பள்ளிப்பழக்கம் என்பதும் இப்படியே தந்தை, தாய், உடன்பிறப்புச், சுற்றம் என நாலு அங்கங்களோடு கூடியதாயிருக்கவேண்டும்.

(1) ஆசான் (போதகாசிரியர்) உயிர்கொடுக்கும் தந்தையைப்போல விவேகஞானம் உதிக்கச்செய்யும் சக்தி வாய்ந்தவராயிருக்கவேண்டும். ஆகையால் இவர் தந்தை ஸ்தானத்துக் குரியவராவர். பள்ளிப் பிள்ளைகளையெல்லாம் ஸமபாவமாய் நடத்துவதோடு ஒவ்வொரு குழந்தையின் குணதோஷங்களையும் மனோபாவங்களையும் தந்தையைப்போலிருந்து அறிந்து அவரவர்கள் பக்குவமறிந்து போதிக்கவேண்டும்.

(2) பள்ளிக்கூடம் (வித்தியாசாலை) பால் கொடுத்துப் பரிபாலிக்கும் தாயைப்போல் பிள்ளைகளுக்கு ஞானப்பால் ஊட்டவேண்டிய வசதிகள் வாய்ந்ததாயிருக்கவேண்டும். முலைப்பாலில்லாத தாயார் பிள்ளைவளர்ப்பது முடியாத காரியம்போல் வித்தியா சாதனங்கள் அமைந்திராத பள்ளிக்கூடம் பிள்ளைகள் மனதைச் சரிவரப் பழக்குதல் முடியாத காரியமாகும்.

(3) உடன்பிறப்பு என்பது ஒருதாய் வயிற்றுப்பிள்ளைகள் சகோதரபாவம் பாராட்டி ஒருவருக்கொருவர் நேசமாயிருந்து உடனுதவி செய்வதுபோல் "பள்ளிப்பிள்ளைகள்" தாமெல்லாம் ஒருபள்ளியிற் பழகினவர்கள் என்கிற ஏகிபாவத்தினால் (*Esprit de Corps*) ஸமஷ்டி பாவம் சித்திக்கப்பெற்று உடன்பிறப்பு முறையில் அறிவுதிக்கப் பெற்றவராதல் சகோதர பாவம் கொண்டாடலாகிய மனப்பழக்கத்துக்குரிய தர்மமாம்.

(4) சுற்றம் என்பது (Environment) என்று சொல்லும் பள்ளிப்பழக்க வாசனைக்குப் பொருந்தும். பள்ளிப்பிள்ளைக்கு ஊரெல்லாம் சுற்றமாகும். ஏனெனில் எதையும் "குற்றம் நாடிக் குணம் நாடி மிகைநாடி மிக்கக்கொளல்" என்கிற ஆன்றோர் வாக்குப்படி இயற்கைப் பிரகிருதி, செயற்கைப் பிரகிருதியென்கிற பிரகிருதி தர்மஸம்பந்தமானவை யெல்லாவற்றையும் அன்போடு ஆராய்ந்து அவற்றின் குணதோஷங்களையறிந்து குணத்தைக் கிரகித்துக் குற்றத்தைநீக்கி எல்லாவற்றையும் தம்முடைய மனப்பழக்கத்துக்கு அனுகூலமான "சுற்றம்" போன்ற உறவுமுறையால் கிரகித்து அறிவு விசாலிக்கப்பெறுவது பள்ளிப் பிள்ளைகளுக்குரிய தர்மமாகும். ஆதலால் ஊரெல்லாம் பள்ளிப் பிள்ளைகளுக்குச் சுற்றம் ஆகும். இந்தப் பாடத்தைத்தான் முதிர்ந்தபடியில் (Civics) ஊர்லக்ஷணம் என்கிற தலைப்பின் கீழ் கற்றுணர வேண்டியவர்களாயிருக்கிறார்கள்.

(3) ஜனசமூகம் அல்லது, உலகம் ஒரு வித்யா விலாஸ ஸாதனம்.

இப்படியே ஜனசமூகம் என்கிற மூன்றாவது வித்தியாசாதனமும் சதுரங்கலக்ஷணம் பொருந்தியதாகும்.

இதற்கு அரசு தந்தைஸ்தானம்; குடி படையரண் நாடு என்கிற சதுரங்கங்களோடுகூடிய அரசாங்கம் செல்லும் தேசம் தாய்ஸ்தானம். அரசியல் என்பது உடன்பிறப்பு ஸ்தானம். உலகியல் என்கிற உலகதர்ம-கர்மசாதனங்கள் சுற்றம்.

விருத்தி ஞானக்கிரமம்.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"—திருக்குறள்.

இப்படியாக படிப்படியே "குழந்தைமனம்" குடும்பத்தில் பிறந்துவளர்ந்து, பள்ளிப் பழக்கத்

திஞல் விரிந்துகுவிந்து உள்ளம்மலர உணர்வுண்டாகித்தேறி, ஜனகமுகத்தில் அரசியல் தர்மம், உலகியல் தர்மம் இரண்டையும் பூரணமாயறியப்பெற்று "உலகஞானம்" என்கிற சித்தவிருத்தி ஞானம் பூரணமாய்ப் பெற்றபின் இஃதெல்லாவற்றிலும் நிலையான சாசுவதானந்தம் இல்லாமைகண்டு தன் மனதையடக்கியாளுதலே ஸாம்பராஜ்யம் அளிக்குமென்று உணர்ந்து "சித்தவிருத்தி நிரோதனம்" என்கிற சிக்ஷாதீக்ஷைக்கிரம சம்பந்தமான மனப்பழக்கத்தால், கடவுளுடைய திருவடியைத்தேடிப் பணியப்பெறுதலே கல்வியின் முடிவானபயன். இது ஜீவன் உற்பத்தியானது முதல் "ஜீவன் முக்தி" யென்கிற ஜீவபந்தமாகிய தளை அறுபடுகிற வரையிலுள்ள மனப்பழக்கத்தைக் குறிக்கும். இதற்கு "பார்ப்பாத்தியம்மா மாடுவந்தது!" என்று சொல்கிற பழமொழிக் கதை பாவனையாக ஏதோ வாங்குகிற சம்பளத்துக்குப் பிள்ளைகளை மந்தையில் மாடுமறியல் போடுவதுபோல், பள்ளியில் மறியல் போட்டுவைத்து சாயங்காலம் வீட்டுக்கனுப்பி வருஷாந்தத்தில் ஏதோ பரீக்ஷையில் தேறினன் என்கிறவியாஜம் ஏற்பட்டால்போதும் என்கிற பாவனையோடு செய்கிற போதனமுறை பிரதிகூல சாதனமின்றி அனுகூல சாதனமாகாது.

கிளிப்பிள்ளை, அணிற்பிள்ளைப் படிப்பு.

(Memorising and Habitual Instinct.)

கிளிப்பிள்ளை, அணிற்பிள்ளைகள் பழகுவதுபோல், சப்தமாத்திரத்தினல் (சப்தார்த்தத்தைக் கிரகிக்கும் சக்தியின்றி) நெட்டுருவென்கிற மனப்பாடம்போட்டுக் கற்கும்படியும், ஸ்வபுத்தி விர்த்தியின்றி, கேவலம் மிருகபாவமான இயற்கைவிர்த்திப் பழக்கத்தினலே அணில்கள் மனேபாவத்தைத் தெரிவிப்பதுபோல், பிள்ளைகள் வாசனைப் பழக்கத்தாலே ஒன்றைச் செய்யகற்றலும் கல்வியாகமாட்டாது. ஏனெனில் "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்று சொல்லியுள்ளார் ஔவையார்.

மனப்பழக்கம் சித்விலாஸத்தையளிக்கும்.

வாசனைப்பழக்கத்தால் (Instinct) செய்யும் காரியங்கள் இந்திரியப் பழக்கத்தைமட்டுமளிக்குமன்றி மனப்பழக்கத்தை யளிக்காது. மனம் என்பது இந்திரியங்களுக்கெல்லாம் ராஜாவாயிருப்பது. அது தன்னையடக்கியாளப் பழகாவிட்டால், அதுதன் பிரஜைகளான இந்திரியங்களை அடக்கியாள முடியாது. இந்திரியப்பழக்கம் அவசியமேயாயினும் மனப்பழக்கம் இல்லாத இந்திரியப்பழக்கம் கல்வியோடு சேர்ந்ததாக மாட்டாது. 'ஸர்க்கஸ்' ஆட்டத்தில் எத்தனையோ மிருகங்கள் அபூர்வமான வித்தைகள் செய்கின்றன. இவையெல்லாம் ஆட்டுவிப்பான் ஆட்ட, அவை இந்திரியப் பழக்கத்தால் செய்கின்றனவேயன்றி, மனப் பழக்கந்தால் செய் வித்தையல்ல. மனம் தன்னை யறிந்தால்தான் அதன் சேஷ்டையடங்கி அலையோய்ந்த சமுத்திரம்போல் சாந்தஸ்வரூபத்தையடைந்து அறிவாகிய சித்ஸ்வரூபம் தன்னில் பிரதிபிம்பிக்கக் காட்டி நிற்கும். தன்னையறியாதவரையில் மூட அரசன் ஸ்வபுத்தியின்றி தன்னையடுத்தார் சொற்கேட்டு நடந்து கெடுவதுபோல், மனம் இந்திரிய வழிப்பட்டு விஷயசுகத்திற் சிக்கி விவேகஞான முதிக்காமற்றுனே கெட்டுப்போம். ஆதலால் மனப்பழக்கம் அவசியம் வேண்டும். இதைச் "சித்திவிருத்தி நிரோதம்" என்று சொல்லுவர் மனப்பழக்கத்தில் தேர்ந்த மூதறிஞர். இத்தகைய மனப்பழக்கம் தான் இகபரசாதகங்கள் எல்லாவற்றையும் அளிக்கும். இதற்குப் பதஞ்சலி, வியாக்ரபாதமுனிவர்கள் "சிதம்பர தரிசன"மளிக்கப்பெற்றகதைநல்லுதாரணமாகும்.

"குடும்பமோடு மாக்ஷிமைபோம்."

"தந்தையொடு வித்தைபோம், தாயோடு ஊட்டம்போம்" என்பது நம்முள் வழங்கும் ஓர் உண்மையான பழமொழி, "குலத்தளவே யாகுமாம் குணம்" என்றுசொல்லியிருக்கிறூர் ஆதலால் நற்குடியிற் பிறவாதார் மாட்சி பெற்றுய்தல் கஷ்டம். ஆகையால் நாம் "குடும்பமொடு மாக்ஷிமைபோம்" என்று சொல்லலாம்.

ஆகலால் வித்தியாவிர்த்திக்கு மூலகாரண மாயும் மூலபலமாயுமிருப்பது குடும்பம். அந்தக் குடும்பத்துக்கு ஆதாரபூதமாயுள்ளார் தாய் தந்தை.

"பெற்றோர் கடன்."

பெற்றோர்கடன் பிள்ளைப் பேறோடு முடியாமல் அப்பொழுதுதான் துவங்குவதாகச் சொல்லலாம். தேஹபோஷணைக்குத் தாய்தந்தை எப்படி அவசியமோ அப்படியே அறிவுவிர்த்தியாகிய மனபோஷணைக்கும் தந்தை தாய் இருவரும் அவசியமே. தந்தை-அறிவு; தாய்-மனம். அனுகூலதாம்பத்தியத்தாலே சற்புத்திர சந்தானமுண்டாவதுபோல, அறிவும் மனமும் அனுகூலதாம்பத்திய முறைபற்றி ஒத்துவாழ்ந்தாலன்றி சித்த விருத்திஞானமும், அதன் முதிர்வில் சித்தவிருத்திநிரோத சக்தியும் உண்டாகாது. இது வேதபூமியாகிய இந்தியாவின் பூர்வீகமான வித்தியா லக்ஷியம்: இலக்ஷியம் கண்டதற்கு இலக்ஷணம் உரைப்பவர்தானே வித்துவான் (புலவனர்) என்னும் பட்டத்துக்குரியவராவர்.

**The Moral Value of Education,**

"கல்வியைக் கல்: கற்றபடி நில்."

சக்தி, சக்திமான் என்பது போல, வித்தை, வித்துவான் என்பதும். வித்தையை வசப்படுத்தி யாளத்தகுந்தவனுக்கு வித்துவான் என்றுபெயர். கல்வியென்றாலும் வித்தையென்றாலும் ஒன்றே. கல்வியைக்கல் : கற்றபடிநில்" என்றார் மேலோர். நடத்தையில் பிரதிபலித்துக் காட்டாத 'கல்வி' கல்வியல்ல. அது ஒரு வேஷம் போலாம். அதுவும் ஆடத்தெரியாதவன் தரித்த வேஷத்துக்கு ஒப்பாகும்.

"Professor John Perry's Presidential Address".

இந்த உண்மைகளை ஆங்கிலேயவித்துவான்கள் கிரகித்து வருகிறதைப் பார்க்க நமக்கு உள்ளக் கிளர்ச்சியுண்டாகிறது.

"பிரிடிஷ் அஸ்ஸோஸியேஷன்" சங்கத்து வித்தியா சம்பந்தமான பிரிவின் தலைவர் ப்ரொபெஸ்ஸர் ஜான் பேர்ரி என்பவர். இவர் சென்ற வருஷம் கூடிய வருஷாந்த சபையில் ப்ரெஸிடெண்ட் (தலைவர்) முறையில் செய்த பிரசங்கம் மிகவும் சிலாக்கியமானதாயிருக்கிறது. இப்பொழுது சம்பிரதாயத்திலிருந்து வரும் எட்டுப் படிப்பு, சோற்றுப்படிப்பு முறைகளைக் கண்டித்து பிள்ளைகள் முன்னுக்குவர பெற்றவர்களே உடனிருந்துழைக்கவேண்டுமென்றும் இந்தக் கடமையை அவர்கள் செலுத்த அருகராய், மந்தையில் மாடுமேய்ப்பதுபோல், கூலிக்கு வேலை செய்யும் அந்நியர்வசம் ஒப்புவிப்பது அநர்த்தம் விளைப்பதாயிருக்கிறதென்றும் நன்றாக விளங்க வற்புறுத்திக் கூறியிருக்கிறார். அஃதோடு வித்தியா விலாஸத்தின் உண்மையான லக்ஷணத்தையும் அவர் எடுத்துரைத்திருக்கிறார். அவருடைய வித்தியா விலாஸலக்ஷண விசேஷத்தை அப்படியே ஆங்கிலத்தில் எடுத்து இதன்முகட்டில் அச்சிட்டு அதன் கருத்தையும் தமிழில் தெரிவித்திருக்கிறோம்.

The "Doing of Their Highest Duties by Parents."

"தாயும் தந்தையும் குருவும் தெய்வமும்"

பெற்றோர்கள் தம்பிள்ளைகளுக்குரிய பெருங்கடனைத் தாங்களே செலுத்தாமல் அந்நியர்வசம் ஒப்புவிக்கும் தற்கால ஏற்பாடு மாறி, பெற்றோர்கள் தாமே தம் பிள்ளைகளுக்கு தாயும் தந்தையும் குருவும் தெய்வமுமாகவிருக்கும் காலம் வரும். உதரபோஷணைக்குத் தாயும், வித்தியா போதனைக்குத் தந்தையும், ஸத்தியஞான அறிவு (விவேகம்) உதிப்பதற்கு அஞ்ஞான இருளைப்போக்குகிறவரான குருவும், இஷ்டசித்திகளை யனுபவித்துக் கிருதகிருத்தியர்களாவதற்கு உபாஸனா தேவதைகள் சித்தியும் அவசியமாவதுபோல், பிள்ளைகள் இகபரசாதனங்களைப் பெறுவதற்கு அனுகூல ஆஸ்பதமாயிருப்பதால் தெய்வமுமாகப் பெற்றோர்கள் தாமே விளங்கும் காலம்வரும். "இல்லறமல்லது நல்லறமன்று" என்றபடி, இல்லமே இந்த வித்தைக்கெல்லாம் இசைந்த

ஸ்தான மாகும். "குலத்தளவேயாகுமாம் என்பதற்கிசைய குடும்பப்பழக்கத்தினாலேயே குணமும் மணமும் குழந்தைகளுக்கு அமையப் பெறும்.

"இளமையிற்கல்"

என்றபடி இளவயதிலேயே படிக்கக் கற்றுக்கொள்ளல் வேண்டும். இதற்கு சத்சங்க வாசனை அத்யாவசியம். "சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்" என்றார் போல, படிக்கப் படிக்கப் படிப்புவாசனை மேயேறும். படிப்புவாசனை யுண்டானால் எந்தக் குழந்தையும் தொட்டிலிட்டுத் தாலாட்டுக் கேட்கும் பருவமுதல் கட்டிலைவிட்டுச் சுடுகாடு சேரும் காலம் வரையில் வித்தியா விலாஸம் குன்றாது மேன்மேலும் அறிவு விசாலிக்கப் பழகிவரும் என்பது நிச்சயம் என்கிறார். இது வாஸ்தவம் தானே. பெற்றோர்கள் இதை வாசிக்கலாம் அதை வாசிக்கக் கூடாதென்று பிள்ளைகளை மௌட்டியத்தில் மூழ்கவைக்கிறார்கள். "மனக்காப்புக் காப்பேயன்றி மதில் காப்புக் காப்பல்ல" என்று ஒரு பழமொழியுண்டு.

"ஸத்ஸங்கவாசனை" விசேஷம்.

பெற்றோர்கள் குழந்தைகள் மனதை நல்வழியில் பழக்கிக் காப்பாற்றி வந்தார்களானால் எந்தப் புஸ்தகத்தை வாசித்தாலென்ன, படிப்புவாசனை அமைவதுஒன்றே முக்கியம். கரும்பு, மதுரரஸத்தையும், வேம்பு கைப்புரஸத்தையும் கிரகித்துக் கொள்வதுபோல், நல்வழியில் பழகிய மனம் நல்லொழுக்கத்தையே கிரகிக்க வல்லதாகும். தீப்பழக்கம் பெற்றமனது தீயவொழுக்கத்தை கிரகிக்கும். பிள்ளையினுடை பள்ளிப்பழக்கம் 16-வயதுடன் சரியாக முடிந்துபோகவேண்டும் என்கிறார். அப்புறம் அவன் ஜீவனார்த்தமான வித்தை கற்று உலகில் பழகி வித்தைபயில வேண்டும் என்கிறார். ஏட்டுப் படிப்புப் படித்து உதட்டி லொன்றும் உள்ளேயொன்றுமாய், வீட்டில் ஒருவிதம் வெளியில் ஒருவிதமாய் நடந்துகொள்ளும் நடத்தையுடைய படிப்பாளிகள் படிப்பு உபயோகமற்ற படிப்பு என்கிறார். உண்மை.

## LULLABIES AS FIRST AID TO CHILD-EDUCATION.

### GLEANINGS FROM THE ANCIENT INDIAN METHODS OF KINDERGARTEN

### பாலபோத சிக்ஷாசாதனம்
### சிறுகுழந்தைகளுக்குச் சொல்லும் தாலாட்டுப் பாட்டுகள்.

இந்நாட்டில் குழந்தைகளைத் தொட்டிலில் போட்டு தூங்கச்செய்யும்பொழுது அவர்களை சீக்கிரமாய் தூங்கப் பண்ணும்பொருட்டும் அல்லது அழுதுகொண்டிருந்தால் அந்த அழுகையை நிறுத்தும்பொருட்டும் தாய்மார்களும் செவிலித்தாய்களும் அத்தை, பாட்டி முதலிய மற்றோர்களும் "தாலாட்டல்" என்ற பாட்டுக்களையெடுத்து "நீலாம்பரி" என்கிற இராகத்தில் பாடுவது வழக்கம். இந்தப் பாட்டுகள் வெகு அருத்தத்தோடு கூடினவாயும் கடவுள் பெருமை முதலியவைகளை எடுத்துக்காட்டுகிறவைகளாயும் இருக்கும். முந்திய அக்டோபர் மாதத்து ஸஞ்சிகையில் ஆண் குழந்தைகளுக்குப் பாடும் தாலாட்டுப் பாட்டுகள் சிலவற்றை யெடுத்தெழுதி அவற்றின் அருத்தத்தை விளக்கினோம். இந்த சஞ்சிகையில் பெண்குழந்தைகளுக்குப் பாடும் சிலவற்றையெடுத்து விளங்கவைப்போம்.

1. ஆராரோ ஆராரோ
அரிவையரே ஆராரோ
சீராரும் தெள்ளமுதே
தெரிவையரே ஆராரோ.

இதன்கருத்து:—ஆர் ஆரோ! பூர்வஜன்மங்களில் நீயாரோ நான் ஆரோ! இந்த ஜன்மத்தில் தாயும் மகளுமாக வந்துதித்திருக்கிறோம். சிறப்புத்தங்கிய தெளிவான அமிர்தத்தைப் போல் தெய்வகளை பிரகாசிக்கப் பெற்று யாவருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கிற அன்புரஸமாகிற இனிமையைக் கொடுக்கிற பெண்ணே! நீ யாரோ, நான் ஆரோ!—என்றபடி.

2. வண்ணமட மயிலே
மாமரத்தில் வாழ்குயிலே
பெண்ணரசே பஞ்சணைமேல்
பிரியமுடன் நித்திரைசெய்.

இதன்கருத்து:—அச்சம், பயிர்ப்பு, நாணம், மடம், என்கிற நான்கு மேலான ஸ்ரீலக்ஷணங்களில் கடைசி லக்ஷணமாகிய "அறிந்தறியாமை" யென்கிற மடமைக்குணம் பொருந்திய மயிலுக்குச் சமானமான அழகு, சாயல் கூடிய பெண்ணே! (இளந்தளிர் மிகுந்த மாமரத்தை வசந்தகாலத்தில் தனக்கிருப்பிடமாகக் கொண்டு ஆனந்தமாய்ப்பாடும்) குயிலின் குரலுடையவளும் பெண்களுக்கெல்லாம் அரசாயிருக்கும் தலைமைஸ்தானம் வாய்க்கப்பெற்றவளுமான குழந்தாய்! நீ பஞ்சுமெத்தையில் சந்தோஷமாய் உறங்குவாய். "மடம்" என்றால் மௌட்டியம் என்று அர்த்தமில்லை. எல்லாவற்றையும் அறிந்தும் அறிந்த அறிவுதனை யறியாமை. இதற்கு "ஆனந்தம், அஜ்ஞானம்" என்று மேலோர் கூறுவர். எல்லாம் அன்பு மயமாயிருக்க அந்த அன்பை யுணர்ந்து அதை அறிந்த அறிவைமட்டும் அறியாமையாகிய உள்ளறிவு குழந்தைகளிடத்தில் விசேஷமாய் இருப்பதால் தான் அவர்களை தெய்வமாகக் கொண்டாடுகிறார்கள்.

3. சண்ணிற்கு மைதீட்டி
காலிற் றணிபூட்டி
பெண்ணரசி யாய்வளரும்
பேதையே கண்வளராய்.

இதன்கருத்து:—இதன் அர்த்தம் சுலபம். "பேதையே" யென்றதனால் "முட்டாளே" யென்று அருத்தம் செய்யக்கூடாது. "பேதமையென்பது மாதர்க்கணிகலம்" என்று சொல்லி யிருக்கிறாராதலால், பெண்கள் மௌட்டியக்குழியில் வீழ்ந்துகிடப்பதே அவர்களுக்கு அழகும் ஆபரணமுமாகும் என்று உண்மையுணரார் பலரும் தப்பர்த்தம் செய்வதுண்டு. இந்தமாதிரியாக ஒரு ஸ்கூல் இன்ஸ்பெக்டரும் அருத்தம் செய்திருக்கப் பார்த்துளோம். ஆனால் அது அதன்சரியான அர்த்தமில்லை. "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றாராதலால் கல்வியெல்லாம் மனதைப் பழக்குவதால்வரும் ஓர் மனோபக்குவம். இந்த மனோபக்குவம் பெண்களுக்குப் பதிவிருதாதர்ம விசேஷத்தினால் சுபாவத்தில்தானே பிறவிக்குணமாக அமைந்திருப்பதால், அதையடையும் வழியென்னவென்கிற விசார ஞானமில்லாமல் சந்தனத்துக்கு மணமும் சங்குக்கு வெண்மையும் இயல்பா யமைந்துள்ளதுபோல், உள்ளமறிந்த உணர்விருந்தும் அதை அறிந்த அறிவுதனை யுணராத "ஆனந்தம்" அல்லது "அஞ்ஞானம்" என்கிற உயர்தத்துவம் அமையப் பெற்றிருப்பதையுணர்த்த அதைத்தமிழில் "பேதமை" யென்றார். பிரகிருதி வித்தை கைவந்தவருக்கும் ப்ரஹ்மவித்தை லபிப்பது கஷ்டமாதலால் இது குறையைச்சொல்லி நிறைவை யுணர்த்தினதாகும். புருஷனையடைந்தும்புருஷசுகம் உணர மாட்டாத அபக்குவப் பெண்ணைப்போல் பதியை ஆச்ரயித்தும் சதிபதி ஐக்கிய தர்மத்தையுணராத பக்குவக்குறைவைச் சுட்டிக்காட்டினபடி என்க.

4. வண்ணமலர் சூட்டி
மன்னும் பணிபூட்டி
திண்ணமுடனே வளரும்
செங்கரும்பே கண்வளராய்.

இதன்கருத்து:—அழகிய பலவர்ணங்களுள்ள புஷ்பங்கள் சூட்டி (பூர்வ சுபவாசனை நிறைந்து) அங்கத்துக் கேற்றதாய்ப்பொருந்தும் ஆபரணங்கள்பூட்டி (குழந்தை லக்ஷணங்களெல்லாம் அமையப்பெற்று) உறுதியாய் வளரும் கரும்பினத்தில் உயர்ந்ததும் அதிமதுரமானதுமாகி செங்கரும்பு ஒத்த "நல்ல மனம்" அல்லது "இனியமனம்" அமையப் பெற்றுள்ள குழந்தாய்! துயில்கொள்வாய்!—என்றபடி.

5. பட்டுத்துகில் விரித்து
பாவாடை மேல்தரித்து
பொட்டிட்டுத் தான் வளரும்
பூவையே கண்வளராய்.

இதன்கருத்து:—அரையில் பாவாடைகட்டி அதன்மேல் பட்டுப் பீதாம்பரதாவணி விரியத்

தரித்து நெற்றிக்கண் உள்ள இடத்தில் அதற்கு ஆபரணமும் மறைவுமாகவிருக்க சாந்துப் பொட்டு முதலானது தரித்து தன்மயமாய் (ஆத்ம ஸ்வரூபமாயிருந்து) வளரும் பூர்வசுப வாஸனைநிறைந்த புஷ்பகந்தமே நீ துயில்கொள்வாய்!—என்றபடி.

6. அத்தைமகனார்வந்தார்
ஆயிரம் பொன் சேலைதந்தார்
சித்தமகிழ் வாய் நீ
திறமுடனே நித்திரைசெய்.

இதன்கருத்து:—தந்தை, தாய், உடன்பிறப்பு, சுற்றம் என்கிற நான்கு லக்ஷணங்களில் முதன் மூன்று பாக்கியங்கள் மட்டுமன்றி நாலாவதாகிய சுற்றமும் நன்றாக அமையப் பெற்றுள்ளாய். உன் பாக்கியத்துக்கு என்ன குறைவு! ஆகையால் உளமகிழ்ந்து மனம் உறுதிப்பட ஆனந்த நித்திரை செய்!—என்றபடி.

அத்தைமகனார்:—தகப்பன்வழிச்சுற்றம். அடுத்த பாட்டில் தாய்வழிச்சுற்றத்தை யெடுத்துச் சொல்கிறார்.

7. மாமன் மணிமாலை
மாசிலாப் பொற்சேலை
பூமாலையோடளித்தார்
பொற்கிளியே கண்வளராய்!

இதன்கருத்து:—தகப்பன்வழிச்சுற்றம் மட்டுமல்ல; தாய்வழிச்சுற்றமாகிய என் உடன் பிறப்பாகிய உன் அம்மானும் உனக்கு நவரத்னமாலையும் குற்றமில்லாத அழகிய விலையுயர்ந்த சேலையும் பூமாலையும் கொண்டுவந்து கொடுத்தார். உன் பாக்கியத்துக்கு என்ன குறைவு! ஆகையால் அழகிய கிளி போன்ற மொழியையுடைய பெண்ணே நீ நித்திரை செய்.

"பொற்கிளி:"—அம்மன் அபயஸ்தம் கொடுக்கும் திருக்கைப் பக்கத்தில் பரைவாக்குச்கு அடையாளமாகப் பூண்டிருக்கும் உயர்தத்துவமாகிய "கிளி." Compare "பொன்னம்பலம்," "பொற்சபை".

8. அத்தைமேற் கோபமோ
அவளில் மனஸ்தாபமோ
கொத்தாரும் பூங்குழலே
கோமகளே நித்திரை செய்

இதன்கருத்து:—இப்படி யெல்லாபாக்கியமும் பொருந்தியிருக்க உனக்கென்ன குறை! என் நாத்தியாகிய உன் அத்தை உன்னையேதாவது கடிந்து பேசினாளோ! அதனால் கோபமாயிருக்கலாமா! அல்லது அவளிடத்தில் மனஸ்தாபம் ஏதாவதுண்டோ! கொத்துக் கொத்தாய்ப் பூமுடித்த கூந்தலுடைய பெண்ணே, அரசன் மகளுக்கொப்பான செல்வியே, நீ துயில் கொள்வாய்!—என்றபடி.

9. வாடியழுத கண்ணீர்
மஞ்சட் குளித்த கண்ணீர்
ஓடிப் பெருங் கடலாய்
ஒழிந்ததம்மா நித்திரைசெய்!

இதன்கருத்து:—முகம் வாடியழுதகண்ணீரும் மஞ்சள் நீராடும்பொழுது மஞ்சள் கண்ணிற் படுவதால் கரித்து அதனால் வடித்த கண்ணீரும் சேர்ந்து பெரிய கடல்போல் பெருகி யாயிற்று! கண்ணீர்விட்டது போதும்! நித்திரை செய்! "அடுத்தது காட்டும் பளிங்கேபோ லகம், கடுத்தது காட்டும் முகம்" என்றார் பெரியோரும். ஆதலால் "வாடி" யென்பது "அகம்வாடி, முகம்வாடி" சோர்ந்து அழுத கண்ணீர் என்று பொருள்படும்.

10. பல்லாங்குழி யாடி
பந்தடித்து நொந்துவந்த
கள்ளத்தை நானறிவேன்
கண்மணியே நித்திரை செய்!

இதன்கருத்து:—குழந்தைகள் விளையாடச் சென்றால், விளையாட்டில் எல்லாவற்றையும் மறந்து அதே சிந்தனையாய் இருந்துவிடும் என்பது சகஜம். ஆனால் விளையாடி முடிந்து வீட்டுக்கு வரும்பொழுது "நாழியாகிவிட்டது; காலந்தவறிவிட்டோம். அம்மாள் கோபிப்பாள், நாம் அபராதியானோம்" என்கிற எண்ணம் தோன்றுமற்றேன்றி அவர்கள் உள்ளமுணரப்பாதிக்கும். அப்பொழுது, "திருட்டுத்தனமாய் உள்ளேபோய் விடுவோம்:

அம்மாள் கோபம் மாறவிட்டு அவளைப்பார்ப்போம்" என்கிற ஒருவித லஜ்ஜையுண்டாகும். இந்த லஜ்ஜை க்ஷணிகமாத்திரமானதே. ஏனெனில் குழந்தைகள் மனதில் எதுவும் நிலைத்து நிற்காது. எல்லாம் க்ஷணிக மாத்திரமாய்த் தோன்றி மறைந்துகொண்டிருக்கும். இது குழந்தைமனத்தின் ஸ்வபாவம். இந்த ஸ்வபாவத்தை "தாய்க்கொளித்த சூலில்லை" யென்றபடி தாயார் தன் குழந்தையின் திருட்டுத்தனத்தையறிந்திருக்கிறதாகச்சொல்லி மெய்ச்சி "கண்மணியே நித்திரை செய்!" என்கிறாள். "பல்லாங்குழி" என்பது பன்னான்கு (பதினான்கு) குழிகள் இருவரிசையாகவுள்ள ஒரு மரத்தட்டில் விதைகளைக்கொண்டு ஆடும் ஒரு விளையாட்டு. இது மனக்கணக்கு விர்த்திக்குச் சாதனமான ஒரு நல்ல விளையாட்டு. இக்காலத்தில் சிறு குழந்தைகள் ஒன்று, இரண்டு கற்றுக்கொண்டு கூட்டல் முதலான கணிதபாடங்கள் கற்றுக்கொள்ள கம்பிகளில் மணிகள்கோர்த்த சட்டத்தை உபயோகிக்கிறார்கள். இதற்குமுன் காலத்தில், குரும்பை காட்டாமணக்குவித்தை முதலிய சல்லிசில் அகப்படக்கூடிய விதைகளைக்கொண்டு இரண்டுகால் வண்டியென்றும் மூன்றுகால் வண்டியென்றும், நாலுகால் சப்பரம், ஐந்துகால் ஆறுகால் தேர் என்று இப்படி பலவிதமான சப்பரங்கள்கட்டி விளையாடுவார்கள். இதனால் கிராமநத்தங்களில் பயிராகும் பயிர்பூண்டுகளின் பரிச்சயம் உண்டாவதோடு, கோரை, ஈர்க்குக் குச்சி, மூங்கிற்பளாச்சு இவைபோன்ற தளவாடங்கள் சேகரிப்பதில் தேஹப்பயிர்ச்சியும் கைகால் முதலிய இந்திரியங்களுக்கு ஒரு சுறுசுறுப்பும், தேர், திருநாட்களில் பார்த்த சப்பரங்களைக் கவனித்து அந்தப்படி சப்பரம் முதலானவைகள் செய்யக் கற்றுக்கொள்வதால் மனப்பயிர்ச்சியும், எல்லாம் விளையாட்டு வேடிக்கையாக நடப்பதால் மன உற்சாகமும்சேர்ந்து குழந்தைகளுக்கு விளையாட்டில் வித்தையும் வித்தையில் விளையாட்டுமாக, இப்பொழுது "இயற்கைப்பாடம்" என்றும் "பொருள்பாடம்" என்றும் குழந்தைகளுக்கு மனதிலேறாத வார்த்தைகளைக்கொண்டு அனேகம் கெடுபிடி கட்டுப்பாடுகளோடு போதிப்பதெல்லாம், குழந்தைகள் வீட்டில் விளையாட்டில் ஸ்வபாவமாகக் கற்றுவந்தனர். "பல்லாங்குழி"யைப்போல் "அம்மானை" "கழச்சிக்காய்" முதலான இன்னும் பலவிளையாட்டுகள் மனப்பயிர்ச்சியோடு இந்திரியங்களின் பயிர்ச்சியையும் தேஹப்பயிர்ச்சியையும் உண்டு பண்ணுவதாயிருந்தன. இப்பொழுது அவைகளைப் பார்ப்பது அபூர்வமாய்விட்டது. சென்னையில் ஸ்கூல் இன்ஸ்பெக்ட்ரெஸாயிருந்த மிஸ்ஸஸ் ப்ராண்டர் "கிண்டர்கார்டனை" ப்பற்றி மாக்மிலன் கம்பெனியாருக்கு ஒருபுஸ்தகம் எழுதினபோது வெகு பரிசிரமப்பட்டு இந்த விளையாட்டுகளை அவருக்குக் காட்டிவைத்தோம். அவரும் அவைகளில் சிலவற்றை அங்கீகரித்து எழுதினர். "எந்தச் சரக்காயினும் சீமைச் சரக்கானால்தான் கிராக்கி யேற்படும்" என்பது நமக்குள் இப்பொழுது ஏற்பட்டு வழங்கிவரும் பழமொழி மாக்ஸ்மிலன் கம்பெனியார் ஏஜண்டு நம்மைத்தேடி வந்தாராயினும், நாம் செய்யக்கூடிய உதவியைமட்டும் செய்தோமன்றி மேலே பிரவேசிக்க மனமில்லை. இப்பொழுது நமது குழந்தைகள் வாசிக்கும் அக்ஷராப்பியாச பாடபாடங்கள் முதற்கொண்டு ஆங்கிலேய கம்பெனியார் அல்லது இன்ஸ்பெக்டருடைய பூரணதயவு பெற்றவர்களால் போட்டால்தான்விலையாகிறது. இதில்நடக்கும் போட்டியில் "அகரமுதலவெழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு" என்பதைமட்டும் மனப்பாடம் போட்டுவிட்டு சண்டப் பிரசண்டமாய்ப்பேசிப் "பண்டித" பட்டமும் பெற்றுவிட்டவர்கள் பிந்துவைநீக்கி 'அ' என்கிற எழுத்தை விகாரப்படுத்தி† யெழுதிப் போதிக்கிறார்கள். 'ஆ' என்பதையும் அப்படியே பின்னப்படுத்திக் காலொடியக் கையொடியக் காட்டிப் போதிக்கிறார்கள். இஃதெல்லாம் கலியின் மஹத்துவம்தான். பணத்தின் பெருமையே பெருமை.

† உதாரணம் அ.

[அடுத்தபாட்டும் இதையே இன்னும் வளர்த்திக் குறிக்கிறது.]

11. சிறுவீடு கட்டித்
தெருவில் விளையாடி
வருமுன் னிளைப்பாறப்
பேதையே கண்ணுறங்காய்!

இந்த விளையாட்டுகளை இக்காலத்தில் "Clay Modelling" என்றுசொல்லி அபூர்வமாய்ப் போதித்து வருகிறார்கள். முன்காலத்தில் ஏழை தனவான் எல்லார் குழந்தைகளும் ஈரமான சன்னமணலைக்கொண்டு, கிளிக்கூண்டு, சிறுவீடு, அடுக்களை முதலான இன்னும் எத்தனையோ விதம்விதமான வேடிக்கைக் கட்டடங்கட்டி விளையாடிவருவது சகஜம். அதனால் அவர்களுக்கு தேஹபலம் மனோபலம் புத்திபலம் விசேஷமாய் அதிகரித்திருந்தது.

இனித்தாயார் தன்குழந்தையின் அருமை பெருமைகளைக்கூறிப் பாலனைத் தூங்கவைக்கிற விவரம் பின்வரும் நான்கு பாட்டுகளினால் வெளியாகிறது.

12. களங்கமிலா வெண்மதியே
கண்டெடுத்த பொன்நிதியே
உளங்களிக்க யான்பயந்த
ஒண்டொடியே கண்துயிலாய்!

இதன்கருத்து:—பால்போல் நிலவெறிக்கும் சந்திரனுக்குக் களங்கமுண்டு; பால்வடியும் ஜோதிமயமான உன்முகத்துக்கு அந்தக் களங்கமுமில்லை; ஆதலால் நீ களங்கமில்லாத வெண்மதிக்கொப்பானாய். உன்னைப் பெற்ற பாக்கியம் தரித்திரனுக்குப் புதையலகப்பட்டதுபோல் என் அகத்திலுள்ள அன்புக்குறைவாகிய வறுமையெல்லாம் நீங்கி திடீரென்று "கற்றூபோல்" அன்பு நிறைந்து பூரிதமாயிற்று. ஆதலால் கண்டெடுத்த பொன்நிதிக்கொப்பானாய்! உன்னைப்பெற்ற யான் உளமகிழ்வு கொண்டதற்கு அளவில்லை. இப்படியெல்லாம் நான் அருமை பெருமையாய்க் கொண்டாடு மின்னற்கொடிபோன்ற என் மனத்தைக்கவரும் குழந்தையே கண்மூடி நித்திரை செய்வாய்.

13. மாற்றுயர்ந்த செம்பொன்னே
வானகத்தில் வாழ்மின்னே
சாற்றுமென் வாய்ச்சொற்கேட்டு
தாழ்குழலே நீ துயிலாய்

இந்தப்பாட்டில் தன் குழந்தை நல்ல குலம் கோத்திரத்தில் பிறந்து அது அங்கபங்கம் அழகுக்குறைவு முதலிய தாழ்ந்தகுணமில்லாமல், உயர்ந்த மதிப்புப் பெற்றதாயிருப்பதாயுன்னி "பத்தரைமாற்றுப் பழுதில்லாத்தங்கமே" யென்றாற்போல் மாற்றுயர்ந்த செம்பொன்னே யென்றும், நிஷ்களநிர்மல சித்தத்தோடு அக்குழந்தையைப் பார்த்தவர்கள் உள்ளத்தைக்கவர்ந்து மின்னல்போல் வந்தவிடம் போனவிடம் தெரியாமல் மறைவதால் வானகத்தில் வாழ்மின்னே யென்றும் வர்ணித்து இன்னிசையோடு என் வாயிலிருந்து பிறக்கும் இந்த இனிய வார்த்தைகளைக் கேட்டு நீண்ட கூந்தலையுடைய என் குழந்தாய் நீ தூங்குவாயாக.—என்றபடி.

14. ஒளியார் நவமணியே
ஓங்குந் தவமணியே
களிதாங்க வென்னுள்ளம்
கண்மணியே நீ துயிலாய்.

இதன்கருத்து:—இந்த தேஹத்தை நவரத்ன த்வீபமாக பாஷைபிஷத் வர்ணித்துக் கூறியிருக்கிறது. பிரகாசம் நிறைந்த நவமணிக்கொப்பான தேஹகாந்தியும் அமைப்புமுடையகுழந்தாய், மேன்மேலும் விர்த்தியாய் வளரும் பெரியதவப்பயனால்சித்திக்கும் சிந்தாமணி யொத்து "பிள்ளை மிடிதீர" வென்று நான் செய்த தவத்தால் அத்தவத்தினது பயனாகப்பிறந்த தவமணியே ஆனந்தநித்திரை செய்யும் உன்மதிமுகம் கண்டு என் உள்ளம் உவகை பூரிக்க, கண்மணியே! நீ துயில் கொள்வாயாக.—என்றபடி.

15. பாலூட்டி மைதீட்டி
பாங்காகத் தொட்டிலிட்டு
தாலாட்ட நீ கேட்டு
தங்கமே கண்வளராய்.

இதன்கருத்து:—பசிதீரப் பால் கொடுத்தேன் உண்டு களித்தாய், கண்ணுக்கு ஆரோ

கியமாக முகம் விளக்கி மையும் இட்டுவிட்டேன். இதோ உன் குழந்தைமனம் களிக்கத் தாலாட்டும் பாடுகிறேன். தூக்கம் வரத் தொட்டிலையும் தாலாட்டுப் பாடிக்கொண்டே ஆட்டிக்கொண்டு நிற்கிறேன். இந்த என் தாலாட்டைக் கேட்டு, தங்கமே! கண் வளராய்.

## POST-PUBERTY MARRIAGE BILL.

## ருதிமதி விவாஹ மசோதா.

இந்த மசோதா கனம் வி. ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் அவர்களால் சென்னை சட்ட நிரூபண சபை முன் ஆலோசனைக்குக் கொண்டுவரப் பட்டிருக்கிறது. இதைப்பற்றிச் சென்னையிற் கூடிய ஜனசாரசீர்திருத்த மஹாசபையார் ஒரு தீர்மானம் செய்திருக்கிறார்கள். அதில் இந்த மசோதாவை அவர்கள் ஆதரிப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். இதன் நிபந்தனை யெல்லாம் கூடி பிராமணப்பெண்களும் அவர்கள் ஆசாரத்தை யநுசரிக்கிற மற்ற ஜாதிப் பெண்களும் ருதுவான பிறகு விவாகம் நடந்தால், அது காரணத்தால் அந்த விவாகம் செல்லாமற்போகாது என்று விதிக்கிறது. இந்த விதி அனுவசியம். ஏனெனில் இது செல்லாது என்று யாரும் சொல்லவில்லை. சாஸ்திரங்களும் இந்த விவாகத்தைச் செல்லாதென்று தள்ளவில்லை. கன்னிகாதான பலனை யெடுத்துச்சொல்லும்போது அஃதை மற்றெல்லாவற்றிற்கும் மேலாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் 'வரசொல்கம்' வாங்கும் இக்காலத்தில் நடக்கும் விவாகங்களைக் கன்னிகாதானம் என்று சொல்வது பரிகாசக்கூத்தேயன்றி, "பேர் கங்காபவானி, குடிக்க நீரில்லை" யென்று சொல்கிற பழமொழியின் கதையாக விருக்கிறது. விவாகம் ஸம்ஸ்காரமாகச் செய்தால் இன்ன விதம் செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. கோமுட்டி, வாணியன், செட்டி முதலான துவஜர்கள் பூணூல் போட்டுக்கொள்ளாமல் விவாகம் செய்து கொள்ளக்கூடாதென்கிற வழக்கமுண்டு. அதற்காக அவர்கள் விவாகம் செய்துக்கொள்ளவேண்டிய காலத்தில் பிள்ளைக்கு 20, 30, 40 வயதானாலும் சரி குருவினிடம் வந்து பூணூல் மாட்டிக்கொண்டு போகிறதுண்டு; அந்த மாதிரியாகத் தாலிக் கட்டு ஆதியில் உத்தேசித்தபடி பெண்களுக்கு ஸம்ஸ்கார தீக்ஷையாகவின்றி புருஷப்ராப்திக்கு இன்றியமையாத ஒரு ஆடம்பரச் சடங்காக நடந்துவரும்பொழுது அது எப்படி நடந்தால் என்ன? எத்தனை வயசில் நடந்தாலும் ஒன்றுதான். புருஷப்ராப்தி எப்பொழுது உண்டாகிறதோ அப்பொழுது தாலிக்கட்டும் ஏற்படுகிறது. இதையே விவாகம் என்று கொண்டாடுவோர்க்கு இந்த மசோதா சட்டமானாலும் ஆகாவிட்டாலும் ஒன்றே. ஏனெனில் அவர்கள் இந்த வழியில் துணிந்திறங்க தைரியம் ஒன்றுமட்டுமிருந்தால் அவர்களைத் தடுப்பார் யாருமில்லை. இல்லாவிடினும், இப்படியொருசட்டம் இருக்கவேண்டியதவசியமென்று ருதுமதி விவாக சித்தாந்த கக்ஷியார் கட்சிகட்டிப் பேசுகிறார்கள். [அதைப் பெரும்பாலார் ஒப்புக்கொள்ளவில்லை. அப்படி ஒப்புக்கொள்ளாதவர்கள் சொல்லும் எதிர்க்கட்சியை "தாய்மார் அபிப்பிராயம்" என்கிற தலைப்பின் கீழ் விரமாய் ஒருவர் எழுதியபடியே அச்சிட்டிருக்கிறோம். அதற்கு எதிர்க்கட்சியை யெடுத்துப்பேச விரும்புகிற தாய்மார்கள் சுருக்கமாக அவர்கள் அபிப்பிராயத்தை யெழுதியனுப்பினால் அவை நிந்தனைமுதலான தோஷங்களில்லாதிருந்தால் பிரசுரிக்கப்படும்.]

ருதிமதிவிவாகம் இப்பொழுது எத்தனையோ நடந்துவருவதைக் காண்கிறோம். அது எல்லாருக்கும் தெரிந்துமிருக்கிறது. ஆனால் ருதுவான பின்தான் விவாகம்செய்கிறது என்று பிருது கட்டிக்கொண்டு அப்படியே தண்டோராப்போட்டுத் தெரிவித்துப் பண்ணுவார் யாருமில்லையென்கிறார்கள். அப்படிச்செய்ய இஷ்டமுள்ளவர்கள் செய்யலாம். அதற்குத் தடையென்னவென்றால், ஜனங்கள் அபவாதம் நேரிடுமென்கிறார்கள். ஜனாபவாதத்துக்கு பயப்படுகிறவர்கள் ஜனங்களுடைய மனதை விசாலிக்கச் செய்யவேண்டும். அல்லது, சொல்கிறவர்கள் சொல்லட்டும் என் மனச்சாக்ஷிக்கு ஒப்ப

நான் நடந்துகொள்கிறேன். என்று துணிந்து போகவேண்டும். அல்லது, "ஊருடன் கூடி வாழ்" என்கிறபடி எப்படியோ அவர்கள் மௌட்டியத்துக்குத் தக்கபடி சமாதானம் சொல்லி ஒத்துவாழவேண்டும். ஸ்ரீராமர் வண்ணான் அபவாத வாக்கைக்கேட்டுச் சீதையைக் காட்டுக்கனுப்பினர். அவருக்கு வண்ணானை நாக்கறுத்துக் கழுவிலேற்ற வேண்டுமென்று தோன்றவில்லை. தர்மம் ஒன்று: கர்மம் பலபடியாகவுள்ளது. ஸநாதநமான தர்மத்தையுணர்ந்தவர்கள் கர்மத்தை விட்டொழிக்கலாமானாலும் சிஷ்டாசாரம் காரணமாக கர்மத்தை யனுசரித்தே வருகிறவர்களாயிருக்கிறார்கள். எனக்கு சொப்பு விளையாட்டிலும் பொம்மையிலும் பிரியமில்லை யென்றால் என் குழந்தைக்கும் அது அனுவசியமாகுமா? கர்ம-தர்ம முணர்ந்து காரியமியற்றவேண்டும். சட்டத்தைக்கொண்டு (நிர்ப்பந்தத்தால்) ஜனங்கள் மனதைத் திருத்திவிடலாமென்று நினைப்பது உசிதமான யோசனையாகத் தோன்றவில்லை. மேலும் ஹிந்துக்களுக்குள் விவாஹம் என்பது "ஆத்மவிவஹாய"; அப்படி யென்றால் விவாஹ லக்ஷியம் ஆத்மலக்ஷியத்தைப் பொறுத்ததாக விருக்கிறது. அதைக்கேவலம் "ஸ்திரீ புருஷ ஸம்போக ஒப்பந்தமாக" மாற்றுவது அனேகருக்கு அருவெருப்பைத் தருவதாயிருக்கிறது. எக்காலத்திலும் எத்தேசத்திலும் உண்மை லக்ஷியத்தையுணர்ந்து அவை அனுபவசித்தாந்தமாகக் கைப்பெற முயலுபவர்கள் வெகு சிலரேயாவர். அதுபற்றி லக்ஷியத்தை மாற்றி விடுகிறதென்றால் அது உசிதமானயோசனையாகவில்லை. உயர் லக்ஷியத்தைத் தாழ்படிக்குக் கொண்டுவருவது நுனிமரத்திலிருந்து அடிமரத்தை வெட்டுவதற்குச் சமானமாகும்.

---

## HEIGHT, WEIGHT, AND BODY MEASUREMENTS.

### மனிதன் உயரத்துச்சுத் தக்க பருமன் ஆகிருதி அளவு விவரம்.

பின்வரும் கட்டத்தில் சாதாரணமாக உயரத்துக்குத்தக்க பருமனும் ஆகிருதியும் இவ்வளவு என்று காட்டியிருக்கிறது. இது எல்லார் விஷயத்திலும் அப்படியே யிருக்கவேண்டுமென்பதில்லை. ஆனால் கௌமார பருவத்தில் 20 முதல் 30 வரையிலுள்ள வயதில் இந்த ஆகிருதி உயரம் அளவைகள் ஏறத்தாழ ஒத்திருக்குமென்பது அனுபவ சித்தாந்தம். 5-அடி உயரம் முதல் 6-அடி உயரம் வரையில் உள்ள உயரத்துக்குத்தக்க ஆகிருதி அளவை விவரம் கீழே குறிக்கப் பட்டிருக்கிறது.

| உயரம். | | நிறை | | மார்ளவு (பூரகம்) | மாரளவு (கும்பகம்) | இடை | முழங்கை மேல் | முழங்கை கீழ் | துடை | ஆட்டுச் சதை | கழுத்து |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| புருஷர். அடி. | அங் | ஸ்டோன்* | பவுண் | அங் | அங் | அங் | அங் | அங் | அங் | அங் | அங் |
| 5 | 0 | 8 | 4 | 31 | 34 | 25¼ | 11¾ | 11 | 18 | 12 | 12½ |
| 5 | 1 | 8 | 8 | 31½ | 35 | 25¾ | 12 | 11¼ | 18½ | 12¼ | 12¾ |
| 5 | 2 | 9 | 0 | 32 | 36 | 26½ | 12¼ | 11½ | 19 | 12½ | 13 |
| 5 | 3 | 9 | 7 | 33 | 37 | 27¼ | 12½ | 11¾ | 19½ | 12¾ | 13¼ |
| 5 | 4 | 9 | 10 | 34 | 38 | 28 | 12¾ | 12 | 20 | 13 | 13½ |
| 5 | 5 | 10 | 2 | 34½ | 38 | 28¾ | 13 | 12 | 20½ | 13¼ | 13¾ |
| 5 | 6 | 10 | 3 | 35 | 39 | 29¼ | 13¼ | 12¼ | 21 | 13½ | 14 |
| 5 | 7 | 10 | 6 | 35½ | 39½ | 30¼ | 13½ | 12¼ | 21½ | 13¾ | 14¼ |
| 5 | 8 | 11 | 1 | 36 | 40 | 30¾ | 13¾ | 12½ | 22 | 14 | 14½ |
| 5 | 9 | 11 | 7 | 36½ | 40½ | 31½ | 14 | 12¾ | 22½ | 14¼ | 15 |
| 5 | 10 | 12 | 1 | 37 | 41 | 32¼ | 14¼ | 12¾ | 23 | 14½ | 15¼ |
| 5 | 11 | 12 | 6 | 37½ | 41½ | 32¾ | 14½ | 13 | 23½ | 14¾ | 15¼ |
| 6 | 0 | 12 | 10 | 38 | 42 | 33¼ | 14¾ | 13 | 24 | 15 | 15½ |
| ஸ்திரீ | | | | | | | | | | | ஸ்திரீ |
| 5 | 4 | 4 | 0 | 34 | 37 | 24 | 13 | 12 | 24 | 14 | 13½ |

* ஒரு ஸ்டோன் என்பது 14 பவுண்டு நிறையுள்ளது.

## THE POTENTIAL AND REMOTE ORIGIN OF THE WAR.

"Your referance to German militarism brings up in my mind the conviction that this war began potentially 25 years ago, when Emperor William II ascended the throne, declared himself Supreme War Lord, and proceeded to prepare his nation for war. His own children were raised from their boyhood to consider themselves soldiers, and to look forward to a destiny of Slaughter: and here in America we know even his daughter only by her photograph in a colonel's uniform. And as with his own children, so all the youth of his empire were brought up."—Extract from Mr. Church's Reply. *Vide* "Vivekachintamani War Number" (January issue): "American Verdict on the War."

The photographs represent the Kaiser's only daughter as a Death's Hussar in her colonel's Uniform, and his daughter-in-law (The German Crown Princess) as a Dragoon in Colonel's Uniform.



## இச்சண்டையின் ஆதிகாரணம்.

### "இல்லப்பழக்கம்போல் எல்லாப்பழக்கமும்."

இந்தச் சண்டையின் ஆதிகாரணத்தை ஆராய்ந்துபார்த்தால் இது 25-வருஷங்களுக்கு முன் இப்பொழுதுள்ள கெய்ஸர் இரண்டாவது உவில்லியம் என்னும் பட்டத்தோடு ஸிம்மாஸன மேறிய காலந்தொட்டு என்று சொல்லலாம் என்கிறார் மிஸ்டர் சர்ச்சில். அப்பொழுது அவர் தாம் ஜெர்மனி ராஜ்யங்களுக்கெல்லாம் மேலான யுத்தத் தலைவராயிருப்பதாகச் சொல்லிக்கொண்டார். அவருடைய குழந்தைகளையெல்லாம் யுத்தத்துக்கு தர்பீது செய்து வந்தார். ஆண் பிள்ளைகளன்றி அவருடைய ஏகபுத்திரியையும் யுத்தத்திற் பழகப் பழகப்பழக்கி அவர் பெரியவரானபோது "யமகிங்கிலியர்கள்" (Death's Head Hussars) என்கிற படை வகுப்பில் ஒரு பட்டாளத்துக்குத் தலைவராக (கர்னலாக) நியமித்தார். அந்த உடையில் அவருடைய படம் மேலே காட்டப்பட்டிருக்கிறது. அமெரிக்கா தேசத்தார் அவருடைய புத்திரியை இந்த உடையில் எடுத்த படத்தினால் தான் அறிவார்களாம். மற்றப்படி அறியமாட்டார்கள். அவருடைய மருமகளாகிய ஜெர்மனி இளவரசியையும் அப்படியே "ட்ராகூன்ஸ்" என்கிற படை வகுப்பில் ஒரு பட்டாளத்துக்குத் தலைவராய் (கர்னலாய்) நியமித்திருக்கிறார். இவர்கள் இருவரும் இராணுவத்தில் கமிஷன் பெற்ற ஆபீஸர்கள் அந்தஸ்திலிருக்கிறார்கள்: இல்லப்பழக்கம் எப்படியோ அப்படித்தான் அமையும் எல்லாப் பழக்கமும் என்பது வாஸ்தவ மாயிற்று.

## AN ETHNOLOGICAL MAP OF AUSTRIA-HUNGARY.

### THE "RAMSHAKLE EMPIRE" THE RUSSIANS ARE "TEARING LIMB FROM LIMB."

"Russians have shed their blood for Servian independence many a time. Servia is a member of her family, and she cannot see Servia maltreated. Austria knew that. Germany knew that, and Germany turned to Russia and said: 'Here I insist that you shall stand by with your arms folded whilst Austria is strangling to death your little brother."

The Russian Slav gave the only answer that becomes a man. He turned to Austria and said: —

"You lay hands on that little fellow and I will tear your ramashackle Empire limb from limb."—*Extract from The Great War Speech of Mr. Lloyd George, the Chancellor of the Exchequer, at Queen's Hall.*




## ஆஸ்திரியா-ஹங்கேரி: பலபட்டடை ராஜ்யம்.

ஆஸ்திரியா-ஹங்கேரி யென்பது ஓர் பலபட்டடை ராஜ்யம். அதில் எத்தனையோ ஜாதியார்கள் ஐக்கிய பத்தியமின்றி பல பட்டடையாகக் கூடியிருக்கிறார்கள். இந்தப் படத்தைப் பாருங்கள். நடுவிலே ஹங்கேரி ராஜ்யம். அங்கே 'மாஜிபர்ஸ்' ஜாதியார் குடியேறியிருக்கிறார்கள். அதன் வடகிழக்கேயுள்ள 'பொஹிமியா' மாஹாணத்தில் "ஸெக்ஸ்" என்கிற ஜாதியார் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தெற்கே ஆஸ்திரியாவில் ஜர்மன் ஜாதியார் மிகுந்திருக்கிறார்கள். வியன்னுவில் இவர்களுக்குச் செல்வாக்கு ஜாஸ்தியானதினால் தான் இந்தப் பெரிய யுத்தம் விளையலாயிற்று. அவர்களைச் சுற்றி தெற்கே யுள்ளவர்கள் 'ஸ்லொவனீஸ்' 'க்ரோட்ஸ்,' 'ஸெர்ப்ஸ்,' 'ஸ்லாவ்ஸ்' இவர்களிருக்கிறார்கள். இவர்களெல்லாரும் அடுத்துள்ள ஸெர்பியா தேசத்தாருடைய ரக்த பந்துக்கள். மேலண்டைப் புறத்திலுள்ள 'ருமேனியன்ஸ்', நடுவிலுள்ள 'மாஜிபர்ஸ்', கிழக்கேயுள்ள ஆஸ்திரியாவின் ஜெர்மன்ஸ் இம் மூன்று ஜாதியார்கள் மட்டும் ஜெர்மனி ஜாதியைச் சேர்ந்தவர்கள். மற்றவர்களெல்லாம் ஸ்லாவ் ஜாதியைச் சேர்ந்தவர்கள். ருஷியர்களும் ஸ்லாவ் ஜாதியைச் சேர்ந்தவர்களே. மொத்தம் 4½க் கோடி ஜனத்தொகையில் 2-கோடியே 40-லக்ஷம் ஜர்மனி வகைராவைச் சேர்ந்தவர்கள். பாக்கி 2-கோடி 10-லக்ஷம் ஸ்லாவ் ஜாதியைச் சேர்ந்தவர்கள்.

இவர்கள் உட்பிரிவு விவரமும் ஜனத்தொகையும் படத்தின் வலது பக்கத்து மூலையில் காட்டப்பட்டிருக்கிறது. இப்பொழுது நேர்ந்திருக்கும் இச்சண்டை முதல்முதல் ஆஸ்திரியாவுக்கும் ஸெர்பியாவுக்கும் நேர்ந்த மனஸ்தாபம் காரணமாகவுண்டான போரிலிருந்து தொத்திக்கொண்டு பரவியதென்று எல்லாருக்கும் தெரியும். இதை ஆங்கில அரசிறை மந்திரியாகிய மிஸ்டர் லாய்ட்ஜியார்ஜ் அவர்கள் வெகு நேர்த்தியாகச் சொல்லி விளங்க வைத்திருக்கிறார். அது எப்படியென்றால்:—

"ருஷியா தேசத்தார் ஸ்லாவ் ஜாதியைச் சேர்ந்தவர்கள். ஸெர்பியாவின் ஸ்வதந்தரத்தைக் காப்பாற்றவென்று அவர்கள் தங்கள் உதிரம் சிந்த எத்தனையோ தரம் சண்டை செய்து தங்கள் மனோபீஷ்டத்தைச் சாதித்திருக்கிறார்கள். ஆகையால் இப்பொழுது ஆஸ்திரியா அவர்களை 'உடல் சிறியார்' என்று அவமதித்துப் போர்க்கிழுத்தால் அவர்கள் பார்த்துக்கொண்டிருக்க மாட்டார்கள். இது ஆஸ்திரியாவுக்கு நன்றாகத் தெரியும். ஜெர்மனிக்கும் தெரியும்; தெரிந்தும் கெய்ஸர் படாடோபம் செய்துகொண்டு, "ஆஸ்திரியா ஸெர்பியாவின் குரவளையில் கைபோட்டு நெறிப்பதை ருஷியா கைக்கட்டிப் பார்த்திருக்க வேண்டியது: நானும் சண்டைக்குப் போகவில்லை, நீங்களும் சண்டைக்கு வரக்கூடாது" என்று சொன்னார். அதற்கு ருஷியர் "நாங்கள் ஆண் பிள்ளை யென்பதுண்மையானால், ஸேர்ப் தேசத்தின்மேல் ஆஸ்திரியா கைபோட்டால், அந்தப் பலபட்டடை ராஜ்யத்தை உறுப்பு உறுப்பாகச் சிதைத்து உருவழியச் செய்வோம்" என்று சபதம் கூறினார்கள். அப்படியே செய்தும் வருகிறார்கள்.

ஆஸ்திரியாவில் பாகி நாடு போல்ஸ், ஸெர்ப்ஸ் முதலான ஸ்லாவ் ஜாதியாரால் குடியேறப்பெற்றுள்ளது. இவர்களெல்லாரும் தம் மினத்தாராகிய ருஷியா தேசத்து ஸ்லாவ் ஸோடு எதிர்த்துச் சண்டை செய்ய மனமில்லாமல் அவர்களைச் சேர்ந்து வருகிறார்கள். அல்லது வேண்டா வெறுப்பாய் எதிர்த்து நின்று சமயம் நேர்ந்தவுடன் கைதிகளாகப் பிடிபட்டுப் போகிறார்கள். கிட்டி வாயில் அகப்பட்டாற்போல் ஜெர்மனி வகைராக்காரர்கள் தம் சொந்த தேசத்திலே வடக்கிலும் ஸ்லாவ்ஸ், தெற்கிலும் ஸ்லாவ்ஸ், அவர்கள் இடையில் அகப்பட்டுக்கொண்டு தவிக்கிறார்கள். இதைக் காட்டவே இந்தப் படம் சித்தரித்தெழுதப் பட்டது. இதை யெழுதினவர் 'மாரெல்' என்பவர். ரிவியூ ஆவ் ரிவியூவுக்காக எழுதியதை அப்பத்திராசிரியர் தயவை முந்திச் சிறிதாக வெழுதிச் சித்தரித்து வெளியிடலானோம்.

## THE SRIMOOLAM POPULAR ASSEMBLY.

## திருவாங்கூர் சமஸ்தானத்து ஸ்ரீமூலம் ஜனப்பிரதி நிதி சபை.

மேன்மைதங்கிய திருவாங்கூர் மஹாராஜா அவர்களின் ஜன்ம நக்ஷத்திரமாகிய மூலநாளில் அந்த ராஜாங்கத்து ஜனப்பிரதி நிதி சபையொன்று சென்ற 11-வருஷங்களாகக் கூடி வருகின்றது. அந்த சபையின் 11-வதுவருஷாந்தகூட்டம் இந்த பிப்ரவரிமீ 15உ யன்று கூடியது. அப்பொழுது திவான் ம-௱-௱-ஸ்ரீ எம். கிருஷ்ணன் நாயர் அவர்கள் துரைத்தன காரியங்களைப்பற்றி அச்சபையார்முன் செய்த பிரசங்கம் நம்முன் இருக்கிறது. திவான்ஜி அவர்களுடைய தயவால் அந்த பிரசங்கம் நமக்கு உடனே சேரும்படியாக ஏற்பாடு செய்யப்பட்டதால் அதைப்பற்றி இந்த மாசத்தில் தானே குறிப்பிட்டெழுதுவது சாத்தியமாயிற்று.

திவான்பஹதூர் ப. இராஜகோபாலாசாரியார் அவர்கள் ஸி. ஐ. இ. சென்றவருஷம் மேமீ 11உ திவான்வேலையைவிட்டு நீங்கினார். அந்தத் தேதியிலிருந்து ம-௱-௱-ஸ்ரீ எம். கிருஷ்ணன் நாயர் அவர்கள் திவானாக நியமிக்கப்பெற்று வேலைபார்த்து வருகிறார். திவான் பஹதூர் இராஜகோபாலாசாரியாரவர் 7-வருஷகாலம் அந்த சமஸ்தான காரியங்களை திவா

னுகவிருந்து பார்த்து வந்தார். அக்காலத்தில் அவர்கள் செய்த துரைத்தன சீர்திருத்தங்கள் பல. அவையெல்லாம் நன்ருக வேலை செய்து வருகின்றன. சென்ற அக்டோபர்மீ கனம் தங்கிய நமது கவர்னர் அவர்களும் அவர் பெருமாட்டியும் மேன்மைதங்கிய மஹாராஜா அவர்களுடைய கோரிக்கைக் கிணங்கி அந்த சமஸ்தானத்துக்கு விஜயமாய்ச் சென்றனர்.

ஐரோப்பாவில் நடந்துவரும் பாரதப்போரில் பிரிடிஷ்ராஜ்யம் ஈடுபட்டிருப்பது மற்றெல்லாதேசங்களிலும் போல் திருவாங்கூரிலும் அதிகமாய் ஜனங்களுடைய உற்சாகத்தைக் கிளப்பிவிட்டது. திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் தமது இராஜ்யத்தின் ஐசுவரியத்தையெல்லாம் சக்ரவர்த்தியவர்களுக் குரியதாக அவருடைய இஷ்டம்போல் இந்த யுத்தத்தை நடத்துவதில் உபயோகிக்கலா மென்று தெரிவித்தார். அத்தேசத்துப் பிரஜைகள் 90-ஆயிரம் ரூபாய் யுத்த ஸகாயநிதிக்காகப் பொருளுதவி செய்திருக்கிருர்கள்.

சென்றவருஷம் சமஸ்தானத்தின் வரவு மொத்தம் ஒரு கோடியே 54-லக்ஷத்து 74-ஆயிரத்து 665-ரூபாய்; செலவு மொத்தம் ஒரு கோடியே 57-லக்ஷத்து 12-ஆயிரத்து 790-ரூபாய். இப்படியாக 2-லக்ஷத்து 38-ஆயிரத்து 125-ரூபாய் அதிகச் செலவு நேர்ந்து சர்க்கார் கைரொக்கத் தொகை 77-லக்ஷத்து 91-ஆயிரத்து 725-ரூபாயிலிருந்து 75-லக்ஷத்து 53-ஆயிரத்து 600-ரூபாவாகக்குறைபலாயிற்று. இப்படி நஷ்டம் நேர்ந்ததாகத் தோன்றுவது கொடையாற்று வேலை, குயிலான் - திருவனந்தபுரம் ரயில்வே ஆகிய இவ்விரண்டு வேலைகளுக்கும் வேண்டிய செலவை வருஷ வருமானத் தொகையிலிருந்தெடுத்து உபயோகித்ததனுல் அன்றி வேறல்ல. இவைகளின் செலவை நீக்கிப் பார்த்தால் 6-லக்ஷத்து 7-ஆயிரத்து 377-ரூபாய் லாபம் காட்டுவதாயிருக்கிறது. யுத்தத்தினுல் கடற்சுங்கம் முதலான வரிகள் குறைந்து விட்டன. வியாபாரம் குறைந்து போனதால் அதனுல் வரும் வரிகளும் கம்மிதான்.

இந்த வருஷத்தில் திருவாங்கூர் சட்டநிரூபண சபையார் நாலுசாதாரண மீட்டிங்கும் ஒரு விசேஷ மீட்டிங்கும் கூடினுர்கள். அவர்கள் செய்த சட்டங்களில் "கோ ஆபரேடிவ் ஸொஸைடீஸ் ரெகுலேஷன் X of 1089" என்பது முக்கியமானது. இதனுல் ஐக்கியபத்திய சங்கங்கள் விர்த்தியாக வேண்டிய முயற்சி யெடுத்துக்கொண்டு அதற்காக ஒரு ரிஜிஸ்திராரும் நியமிக்கலாயிருக்கிருர். கிராம பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் புதிதாய் ஏற்பாடுசெய்யச் சட்டம் செய்திருக்கிருர்கள். அவைகள் ஏற்பட்டால் ஸிவில் கோர்ட்டுகளிலுள்ள வழக்கு மிகுதி கொஞ்சம் குறையலாம். பிரதம வித்தையை நிர்ப்பந்தமாக எல்லாப்பிள்ளைகளுக்கும் போதிப்பதற்கான மசோதா தள்ளுபடியாக நேரிட்டது. அதிக வரியின்றி நிர்ப்பந்த வித்தியாபோதனை ஏற்பாடு முடியாதகாரியம் என்று திவான் சொல்லுகிருர். ஸர்க்கார் பெற்ரோர்களுக்கு உதவியாக உழைத்தால் மட்டும் இது கடைத் தேறுமேயன்றி, பெற்ரோர்களுக்கு விரோதமாக ஸர்க்கார் செய்யும் முயற்சி யெதுவும் அவ்வளவாகப் பயன்படாதென்று நினைக்கிருேம். ம-ா-ா-ஸ்ரீ திவான்ஜியவர்களும் சட்டநிரூபண சபை மெம்பர்களும் ப்ரொபெஸ்ஸர் ஜான்பெர்ரியவர்களுடைய அபிப்பிராயத்தைக் கவனித்துப் பார்த்தால் நலமாயிருக்குமென்றெண்ணுகிருேம்.

எல்லா தேசங்களிலும்போல் இந்த சமஸ்தானத்திலும் வழக்கு வளர்ந்துகொண்டேதானிருக்கிறது. அசல் வழக்குகள் பாக்கி 17-ஆயிரத்து 618-லிருந்து 19-ஆயிரத்து 408-வரையில் அதிகமாயிற்று. ஒரு வருஷம், இரண்டு வருஷம் மூன்று வருஷம் பாக்கியுள்ள கேஸ்கள் அதிகமாய்க் கொண்டு வருகின்றன. சென்னை ஸிவில் கோர்ட்டில் ஒரு வியாஜ்யம் தொடுத்தால் அது விசாரணைக்கு வரக்குறைந்தது இரண்டு வருஷம் செல்லுகிறது. அதற்குள் 10-தரம் விசாரணை போட்டுப் படிகட்டு

வதில் கக்ஷிக்காரன் தாலியறுந்துபோய்விடுகிறது. கேஸ் விசாரணைக் கெடுத்துக்கொண்டால் அரைமணி நேரத்தில் எப்படியோ முடித்துவிடப் பார்க்கிறார்கள். வியாஜ்யம் வழக்குகளில் மாட்டிக் கொள்வதைப்போல் பிராணஹானி வேறில்லை. ஆயினும் ஏழை ஜனங்களுக்கு இது தெரிகிறதில்லை. ஒரு தரம் கோர்ட்டேறி அனுபவப்பட்டால் ஆள் மிஞ்சுவது அபூர்வமாய் விடுகிறது. இது எல்லாதேசங்களிலும் ஒரேபடியாக நடந்துவருகிறது.

வித்தியா விஷயம் திருவாங்கூரில் சென்ற வருஷம் வழக்கம் போல் விர்த்தியாய்க் கொண்டு வந்தது. சர்க்கார் அனுமதி பெற்ற பள்ளிக்கூடங்கள் 1,763-லிருந்து 1,777 வரையில் அதிகப்பட்டது. அவைகளில் படிக்கும் பிள்ளைகளின் தொகை 2-லக்ஷத்து 4-ஆயிரத்து 971-லிருந்து 2-லக்ஷத்து 25-ஆயிரத்து 341 வரையில் அதிகப்பட்டது. வித்தியா இலாகா தலைவருக்கு பெர்ஸனல் அஸிஸ்டெண்ட் ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். ஸ்கூல் இன்ஸ்பெக்டர் ஒருவரும் 6-அஸிஸ்டெண்ட் ஸ்கூல் இன்ஸ்பெக்டர்களும் அதிகமாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். மஹாராஜா காலேஜி ஆங்கிலத்திலும், சரித்திர பாடத்திலும் "பி. ஏ. ஹானர்ஸ்" வரையில் படிப்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஸ்வபாஷா கமிட்டியார் செய்த ரிபோர்ட்டையனுசரித்து பிரதம வித்தியா பாடசாலைகளில் போதித்துவரும் பாடங்களை விர்த்திசெய்யவும், ஸ்வபாஷையில் உயர்தரபரீக்ஷை யொன்று நடத்தவும் தீர்மானித்தார்கள். இந்தப்பரீக்ஷை ஸர்க்கார் அனுமதிபெற்ற பாடசாலைகளிலிருப்பவர்களுக்கு மட்டும் உரியதாகச் செய்திருக்கிறார்கள். பள்ளிக்கூடப் படிப்பு முடிந்ததும் "ஸ்கூல் லீவிங் ஸெர்டிபிகேட்டில்" பப்ளிக் ஸெவிர்ஸுக்கு யோக்கியமானவன் என்று எழுதி வந்த அமூலை அனுவசியமென்று எடுத்துவிட்டார்கள். ஸம்ஸ்கிருத பாடசாலை காலேஜாக உயர்த்தப்பட்டது. ஸ்கூல் உபாத்தியாயர்களுக்கு "ப்ரொவிடெண்ட் பண்டு" என்கிற ஸகாயநிதி யேற்படுத்த முயற்சியெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். சென்னை ராஜதானியிலுள்ளவர்கள் இது விஷயத்தில் இன்னும் மனுச்செய்து கொண்டேதானிருக்கிறார்கள்: கதிமோக்ஷம் பிறக்கவில்லை. வித்தியா இலாகா செலவு 12-லக்ஷத்து 84-ஆயிரத்து 450-ரூபாயிலிருந்து 15-லக்ஷத்து 89-ஆயிரத்து 80-ரூபாயாக அதிகரித்திருக்கிறது. இந்த வருஷத்துச் செலவு 18-லக்ஷரூபாய்க்குக் கணக்குப் போட்டும் இன்னும் 50-ஆயிரரூபாய் சிப்பந்திச் செலவுக்காக அதிகப்படிச்செலவுஸாங்ஷன்செய்யவேண்டியதாயிருந்ததென்கிறார். மொத்தத்தில் வித்தியா இலாகா அபிவிர்த்தி திருப்திகரமாயிருந்தது. தர்மச்செலவு அகவிலை யேற்றத்தினால் திருவனந்தபுரத்தில் 3-லக்ஷத்து 59-ஆயிரத்து 296-ரூபாயிலிருந்து 3-லக்ஷத்து 62-ஆயிரத்து 117-ரூபாயாகியிருக்கிறது. ஆனால் வெளிநாட்டு ஊட்டுப்புரைச் செலவு 100-க்கு 12-கம்மிதான். ஜனப்பிரதிநிதிசபை 15வ. கூடி 24வ. கலைந்தது.

---

THE "VIVEKACHINTAMANI" WAR NUMBER.—With the last issue to hand "the Vivekachintamani War number' being "A Houshold Narrative of Contending Folks in the Great War of 1914" issued in three monthly parts during November, December and January comes to a close. The current edition having been exhausted we are promised a re-issue of the three parts in one, which can be had by those who register their names for Rupee one annas two by V. P. P. There are a number of apt illustrations with three maps, the one showing the Western Theatre of War in France and Belgium, the other showing the Eastern Theatre of War around Warsaw and the third showing the exploits of the illfated 'Emden' that was destroyed on the 9th November.—*The Hindu*, 16-2-15.

"The style and matter contained in the Magzine would be useful to the teachers in Board's Schools both to improve their language as well as general knowledge".—Recommendation of the Sub-Assistant Inspector of Schools.

## "THE PRIDE OF SELF."

### "நானென்ற ஆணவம்."

இராகம்-வேகடை; தாளம்-ரூபகச்சாப்பு

பல்லவி.

நானென்ற ஆணவம் நீ கொண்டதால்-பயன்
யாதுண்டு பாழ் நெஞ்சமே!

அநுபல்லவி.

தானந்தமாதி யிலானின் தப்பார் முதல்
வானந்தமாளக் கண்டானந்தமாகியும்—(நானென்ற)

சரணங்கள்.

1

பல்லாயிரங் கோடியண்டங்களோட்டவும்
பரிதிமுதலிய தீபங்கள் காட்டவும்
எல்லாவுயிரும் படைத்துண வூட்டவும்
ஈசனுண்டிங்கி தெல்லாங்கண்டு கேட்டபின்,
—(நானென்ற)

2

கேடு நினைத்தவர் கேடு கெடுக்கவும்
கேதமுடையவர்க் கீடுகொடுக்கவும்
தேடுமடியவர் துன்பந்தடுக்கவும்
தெய்வமுண்டென்ற சொல்காது மடுக்கவும்,—
—(நானென்ற)

3

ஏழை எளியவர்க்கின்பம் பெருக்கவும்
ஈரமில்லா நெஞ்சைச் சூடிட்டுருக்கவும்
தாழாதவரைக் குனிய நெருக்கவும்
சுவாமியுண்டிங்கி தெல்லாங்கண்டிருக்கவும்,—
—(நானென்ற)

4

செல்வம் வளரச் சிகரங்கிளர்த்தனை
செல்வத் திலே மறந்தாயொருகர்த்தனை
வல்லமை செல்லின்மதத்துத் தகர்த்தனை
வண்ணமோய்ந்தால் களிமண்ணை நிகர்த்தனை—
—(நானென்ற)

5

ஓடிமறைகின்ற மின்னலைப் போலவும்
ஆடியொடுங்கிடும் பாவையைப் போலவும்
சாடிற்கறங்கிடும் பம்பரம் போலவுந்
தானிருந்தீதறி யாதவர் போலவும், —(நானென்ற)

6

கண்டுமறைந்த கனவினைப் போலவும்
காருற்றபோதுற்ற வில்லினைப் போலவும்
உண்டில்லையென்னும் குமிழியைப் போலவும்
உற்றதுவாழ்வென்ப துற்றறியாய் போலும்,
—(நானென்ற)

## THE JOY OF LIFE.

### ஆனந்தக்களிப்பு.

இராகம்-நாதநாமக்கிரியை; தாளம்-ரூபகச்சாப்பு.

பல்லவி.

துறவறமேதுக்கு மனமே—இல்
லறநல்லறமென்பது பெரியோர்வசனமே.

சரணங்கள்.

1

பெண்டு பிள்ளைகளுக்காதாரம்-இந்தப்
பெருமுலகுக்கு நாம் அருமுபகாரம்
பண்டுநாம் அமைத்தசாரம்-அந்தப்
பாரமெடுப்பதோ விடுவதோ வீரம்! —(துறவற)

2

தந்தைதாய் தமருக்கு நேத்ரம்-இந்தத்
தாரணி தன்னிலோர் நாடகசூத்ரம்-ந
டந்திட நாமொருபாத்ரம்-அதை
நடத்தாமலோடிட ஏனிந்த ஆத்திரம்! —(துறவற)

3

முந்தியபாத்ரத்திலொன்று-அந்த
முற்றுந்துறந்த துறவியும் நின்று
ஒன்றும் நிலையில்லையென்று-நமக்
குணர்த்துவரன்றி வனம் நமக்கன்று! —(துறவற)

4

நிகழ்வதெல்லாம் ஈசன் செயலே-இதை
நினையாமல் நம்மதென்பது சுத்த மயலே
புகழ்வதெல்லாம் ஈசனியலே-கர்ம
புண்யபாவமும் நமக்குண்மையில் அயலே!—(துறவற)

5

தலைவனருளை நித்யம்தேடு-தர்ம
சாதனைசெய்வதற்குப் போதுமே நாடு
அலைவதேன் நீ வெறுங்காடு-அதை
யடையாதவருக்குக் கிடையாதோவீடு! —(துறவற)

## A NEEDLESS ALARM IN SOCIAL LEGISLATION.

THE POST-PUBERTY MARRIAGE BILL.

THE INDIAN MOTHERS' VIEW OF IT.

*The Indian Social Reformer* of 20th December, referring to the statement that in all post-puberty marriages which have taken place in the Madras Presidency, the fact of their being so was concealed, says, that the statement "is hardly correct," and continues as follows:—"The statistics which we gave in our leading article in the last issue, are conclusive on the point. Even where there has been concealment, it has been one in which all the parties concerned have acquiesced, showing that the moral sense of the community sees no objection to such a marriage. It has been a "concealment' which concealed nothing. Any one who is at all acquainted with the habits of the ordinary Hindu household, will understand this."

Referring to Sir T. Muthuswamy Iyer's Judgment which the Hon'ble Mr. Sastriar has quoted, the *Reformer* quotes an extended extract from the same Judgment taken from an article from the pen of Mr. K. S. Ramaswamy Shastri, B.A., B.L., and says:—"After reading this extract, one cannot but say that quoting the high authority of Sir T. Muthuswamy Iyer in the way in which Mr. Srinivasa Shastriar has done, is hardly fair. Mr. V. Krishnaswami Iyer whom Mr. Shastriar himself quotes said: "It is certain that no court of law can now declare invalid any marriage which takes place after the puberty of the bride in the highest Hindu caste." Sir Sankaran Nair's authority is also doubted.

After quoting such an authority, we think we can let the views of the Indian Mother who spoke freely after reading and discussing Mr. Shastriar's own article in Tamil at a mothers' meeting, go forth to the public in its unmutilated form. We ask for the indulgence of the Hon'ble Mr. Shastriar and the Hon'ble Judges of the High Court whose names have been dragged in the controversy, for the humorous directness and plain speaking which characterise the Indian Mothers' views which we have been at some pains to collect and reproduce in the original from in which they were given expression to.

[Since the above was written a High Court Judge has given proof of his conviction of the legality of post puberty marriages by actually allowing his son to marry the bride of his choice puberty.]



YOUNG INDIAN—THE FRUIT IS NICE. WE OUGHT TO GO IN FOR IT. OLD INDIAN—NO, I KNOW IT IS SOUR.

"எங்கள் அப்பா குதிருக்குள் இல்லை."

"ருதுமதி விவாஹ மசோதா"

பெண்களைப் பெற்றவர்கள் அபிப்பிராயம்.

'ஸ்ரீமதி" வாக்கு

சென்னைச் சட்டநிரூபண சபை மெம்பராகிய கனம். வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் அவர்கள் சென்ற நவம்பர் மாதம் நடந்த சென்னை சட்ட நிரூபண சபையில் "ருதுமதி விவாஹ மசோதா" என்று ஒரு மசோதா ஆலோசனைக்குக்கொண்டுவர அனுமதி பெற்றிருக்கிறார். அந்த மசோதாவை கவர்ன்மெண்டார் அச்சிட்டுப் பிரசுரம் செய்திருக்கிறார்கள்.

சாஸ்திரியார் உத்தேசம் என்னவென்ருல், பிராமணர்களுக்குள்ளும் அவர்களை யனுசரித்து வரும் வேறு சில ஹிந்து வகுப்பினர்களுக்குள்ளும் பெண்களை ருதுவான பிறகு விவாஹம் செய்து கொடுத்தாலும், அந்த விவாஹம் சட்டப்பிரகாரம் செல்லவேண்டும்; அப்படி செல்லுவது சந்தேகமாயிருப்பதாகத் தோன்றுவதால் அது சொல்லத்தக்கதுதான் என்று சட்டம் ஒன்று உண்டுபண்ணவேண்டுமென்பதாகத் தெரிகிறது.

இதற்கு வேண்டிய ஆதார நியாயங்களை நமது சாஸ்திரியார் அவர்கள் வெகு சாமர்த்தியமாக வெடுத்துச் சோடித்திருக்கிருர்.

இப்பொழுது ஹிந்துக்கள் கவனிக்கவேண்டியதெல்லாம் என்னவெனில்:—கனம் சாஸ்திரியாரவர்களும் இன்னும் சில கௌரவஸ்தர்களும் ருதுவான பிறகு செய்யும் விவாகம் செல்லுமோ செல்லாதோவென்று சந்தேகமிருப்பதால் அச்சந்தேகம் தீர "ருதிமதி விவாகம் செல்லத்தக்கது" என்று ஒரு சட்டமுண்டு பண்ணவேண்டியது அவசியம் என்கிருர்கள். ஆனல் அவர்களே அந்த சட்டத்தை ஜனங்கள் மதிக்கமாட்டார்கள் என்று சொல்லுகிருர்கள். ஜனங்கள் மதிக்காவிட்டாலும் கோர்ட்டார் மதிப்பார்கள்: ஆதலால் சட்டம் செய்ய நியாயமுண்டு என்கிருர்கள். இது சரிதானு? என்று பார்க்கவேண்டும்.

கோர்ட்டார் சட்டப்படி நியாயம் செலுத்துகிறவர்கள். ஹிந்துக்கள் விவாஹ விஷயத்தில் சட்டமின்றி மிலேச்சர்களாக வாழ்ந்து வந்தவர்களில்லை. சாஸ்திரியார் அவர்களே "பம்பாய், பஞ்சாப் முதலிய இடங்களில் அனேகர் துணிந்து பெண்களை வயதான பிறகு மணஞ்செய்து கொடுக்கிருர்கள்: சட்டத்திற்கு ஏற்றதா என்கிற பயமே அவ்விடத்தில் தோன்றவில்லை போலும்" என்கிருர். அவர்களுக்குத் தோன்ருத பயம் இவர்களுக்குத் தோன்றுவானேன்? இந்தக் கேள்விக்குத் தான் சரியான பதில் சொல்ல வேண்டுமென்று இரண்டு பெண்களைப்பெற்ற "ஸ்ரீமதி" கேட்கிருர். அந்தக் கேள்வி நியாயமான கேள்வியே. ஆனல் சாஸ்திரியாரை நேரப் போய்க் கேட்க அவருக்குத் துணிவு பிறக்கவில்லை. அவருக்காக வேறு யாராவது போய்க்கேட்கலாம் என்ருலும், சாஸ்திரியார் "ஸெர்வன்ட்ஸ் ஆப் இந்தியா" ஸொஸைடி"க்குச் சென்னையில் தலைவராயிருக்கப்பட்டவர். அவருக்குச் சிஷ்ய வர்க்கம் மிகவுண்டு. பல ஜோலிக்காரர். வந்தவர்களையெல்லாம் பார்க்கவும், பார்த்து அவர்கள் கேட்பதற்கெல்லாம் பதில் சொல்லவும் அவருக்கு அவகாசம் இருக்கமாட்டாது. அப்படியே இருந்தாலும் அவரைச் சேர்ந்தவர்களுடைய சிபார்சு வேண்டும். அது இல்லாமல் ஒன்றும் நடவாது போலும். ஆனல் அவர் ஒரு உபகாரம் செய்திருக்கிருர். அவர் கையெழுத்துப்போட்டு ஒரு வியாஸம் எழுதியிருக்கிருர். அதை எல்லாப் பத்திரிகைகளுக்கும் அனுப்ப அவருக்கு அவகாசம் இல்லாவிட்டாலும் ஒரு பத்திரிகையில் அது வெளியிடப்பட்டிருக்கிறது. அந்தப் பத்திராதிபர் பாக்கியசாலி தான். அவருடைய அனுமதியின்றி நாம் அதைப் பிரசுரிப்பது ஒழுங்குத் தவறு ஆதலாலும், சாஸ்திரியாருடைய 'பேட்டி' கிடைப்பது இலகுவில்லையானதாலும், அதில் சாஸ்திரியார் அவர்கள் வெளியிட்டுள்ள அபிப்பிராயங்களைக் கொண்டு "ஸ்ரீமதி" கேட்ட கேள்விக்கு என்ன பதில் சொல்லலாமோ அதை ஊக்கமாய் எடுத்துக் காட்டுவது நம் கடமையாயிருக்கிறது.

சாஸ்திரியார் சொல்கிறபடி, "நம்முடைய ராஜதானியில் மட்டும் இந்தப் புது ஆசாரம் ஏற்பட வேண்டுமென்று வெகுகாலமாய் பிரயத்தனம் செய்தும், இது வரை ஆந்தா நாட்டில் மட்டுந்தான் ஏதோ இரண்டு மூன்று விவாஹங்கள் நடந்திருக்கின்றன."

இதனல் "புது ஆசாரம்" ஏற்பட வேண்டுமென்று "வெகு காலமாய் பிரயத்தனம் செய்தவர்கள்" யாவராயினும், அவர்களுடைய பஹீரதப் பிரயத்தனங்கள் பலிக்கவில்லை

யென்று ஏற்படுகிற தல்லவா! ஆம். ஆனால் உண்மையில் இவ்வித விவாகங்கள் தமிழ் நாட்டிலும் வருஷந்தோறும் நடந்து வருகின்றன வென்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். ஆயினும் இதைப்பற்றி பத்திரிகைகளில் பேர்விளங்க தண்டோராப்போட்டுக் கொண்டு கிளம்பவேண்டியநிமித்தமாவது அவசியமாவது அவர்களுக்குப்படவில்லை. ஆதலால் "ஊருடன் கூடிவாழ்" என்கிற முதுரையை யொட்டி அவர்கள் ஊருக்கு விரோதமாக நடந்துகொள்ளும் பெருமையையும் பிரக்கியாதியையும் விரும்பாமல் நாடொக்க நடந்துகொண்டுபோயிருக்கிறார்கள். இது சாஸ்திரியாருக்கும் தெரிந்த விஷயம் தான் என்று தோன்றுகிறது. ஆனால் அவர் இதை எப்படிப்பார்க்கிறார் என்றால், அதை அவர் வாக்கு மூலமாகவே வெளியிடுவோம். அவர் இதை எப்படித்தெரிவிக்கிறார் என்றால்,—

"தமிழ் நாட்டிலோ வருஷந்தோறும் சில பெண்களுக்கு இந்த எல்லை தாண்டியே விவாஹம் நடக்கிறதென்பது எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும், அதை வெளியில் ஒப்புக்கொள்ளாமல் உண்மையை மறைத்து கார்யம் நடைபெறுகிறது. இப்படி பயந்து பொய்சொல்லி ஆசார வழுவுதல் செய்யாமல், பஹிரங்கமாய் பெரிதான பெண்ணென்றே கல்யாணம் செய்தால் என்ன?" என்று கேட்கிறார். (கட்டையெழுத்துப் போட்டது நம்முடையகாரியம்.) "ஸ்ரீமதி" யம்மாளும் இக்கேள்வியைத்தானே திருப்பிக் கேட்டு, "இவரையார் பயந்து பொய்சொல்லி ஆசாரவழுவதல் செய்யச் சொன்னார்கள்? பஹிரங்கமாய் பெரிதான பெண்ணென்றே தம் பட்டம் அடித்துக்கொண்டு கல்யாணம் செய்வதை யார்தடுத்தார்கள்?" என்று கேட்கிறார். இந்தக் கேள்விகளை சாஸ்திரியார் முன் "ஸ்ரீமதி" தேவி நேரிற் கேட்டால் அவர் என்ன பதில் சொல்வாரோ தெரியாது. ஆனால் அவர் "எங்கப்பா குதிருக்குள் இல்லை" யென்றவன் கதையாக ஊராரைத் தூஷித்துவிட்டு அதற்குள்ள காரணத்தையும் தானேவெளியிடுகிறார். அவருடைய வாக்குமூலம் இது:—"இதை ஜாதியார் ஒப்பமாட்டார்கள்; தகுந்த மாப்பிள்ளை கிடைக்க மாட்டான்; கிடைத்தாலும் சுற்றத்தார் கலியாணம் செய்து கொடுப்பவர்களையும் செய்பவர்களையும் தள்ளிவைப்பார்கள்."—"ஜாதிக்கட்டு, சுற்றத்தார்விரோதம் முதலிய கேடுகளை மாற்ற ஒருவராலும் முடியாது."

அப்படியானால் "ஒருவராலும் மாற்றமுடியாத" விரோதத்தை மேலெடுத்துப் போட்டுக் கொள்ளவில்லை யென்று பிறரைத்தூஷிப்பானேன்? இவர்தாமே மேலெடுத்துப் போட்டுக் கொண்டு வீரதீரத்தோடு மூஷ்டிக்கு நிற்பதை யார் தடுத்தார்கள்? ஒருவரும் தடுக்கவில்லை. ஜனசம்மதம் பெற்று ஆசாரத்தை மாற்றவோ முடியவில்லை. ஆனாலும், ஆசாரமோ மாறிவருகிறது வாஸ்தவம். "எல்லோருக்கும் தெரிந்து" நடக்கும் விஷயம் எப்படித் திருட்டுவிவாஹமாகும்? மாறிக்கொண்டு வருகிற ஆசாரத்தை ஏன் மாறவிடக்கூடாது? அறையிலாடுவோரை யேன் அம்பலத்தாட இழுக்கவேண்டும்? "ஸ்ரீமதி" கேட்கும் இக்கேள்விகளுக்கும் இவைபோன்ற இதர கேள்விகளுக்கும் திருப்திகரமான விடையளிக்க நம்மால் முடியவில்லை. "புது ஆசாரத்தை நிலை நாட்டவேண்டுமென்று உத்ஸாகம் கொண்டவர்கள்" அம்பலத்தாடி அதனால் வரும் புகழோ இகழோ, அதைக் கட்டிக்கொள்வதை யார் வேண்டாமென்று தடுத்தார்கள்? நாம் அறிந்த வரையில் ஒருவருமில்லை. "கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை" யென்கிற பழமொழியொன்றுண்டு. அந்த மாதிரி புது ஆசாரத்தை நிலைநாட்டிவிட்டதாகப் பேரும் பட்டமும் பெறவும் வேண்டும்: அதனால் வரும் கஷ்டத்தைப் பொறுக்கவும் திறமையில்லை! ஜன அபிப்பிராயத்தை மாற்றவோ சக்தியில்லை. ஜனக்கட்டுப்பாட்டை யெதிர்க்கவோ, உபத்திரவம் பொறுக்கமுடியாததாயிருக்கிறது. ஆகையால் கட்டுப்பாடு செய்கிற ஜனங்களைக் கோர்ட்டுக்கிழுத்தால் அவர்கள் அடங்கி

விடுவார்கள். இப்பொழுது கோர்ட்டுக்குப் போனால் பிரதிவாதிகள் "எங்கள் ஜாதி வழக்கம் இது: வாதி ஜாதிவழக்கத்தை மீறிநடந்தான்: ஆகையால் ஜாதிப் பிரஷ்டனென்று தள்ளிவைத்தோம்" என்பார்கள். புதிதாய் ஒரு சட்டம் செய்து ருதுமதி விவாகம் சட்ட சம்மதமானது என்று ஏற்படுத்திவிட்டால், "சட்ட சம்மதமான காரியத்தைச் செய்தேன்; இவன் என்னை ஜாதிப் பிரஷ்டன் என்றான்" என்று சொல்லி நஷ்டப்பிராது செய்யலாம். இதற்காகத்தான் இந்த மசோதா உபயோகப் படுமேயன்றி மற்றப்படி வேறு பிரயோசனமொன்றையும் காணோமென்கிறார் "ஸ்ரீமதி" தேவி.

இதற்கு நாம் என்ன பதில் சொல்லியும் அவர் அவைகளை ஒப்புக்கொள்வதாயில்லை. "உங்கப்பா குதிருக்குள் இல்லை தான்: ஆனாலும் குதிர்வாயைத்திறந்து பார்த்து விட்டுப் போவோம்" என்று பதில் சொல்கிறார்.

ஸர் திருவாரூர் முத்துசாமி ஐயர் அவர்கள் தீர்ப்பையும் தற்காலம் ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருக்கிறவர்கள் நால்வருடைய அபிப்பிராயத்தையும் கூட எடுத்துச் சொன்னோம். "இந்த ஜட்ஜிகளுடைய மனைவி மக்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்லும் கேட்கிறேன்" என்று சொல்கிறார். ஜட்ஜிகள் அபிப்பிராயம் கோர்ட்டேறுகிறவர்களுக்கு முக்கியம். விவாஹம் செய்வது கோர்ட்டேறுவதற்காகவில்லை. சாஸ்திரத்தில் ருதுமதி விவாஹம் செல்லாதென்று எங்கும் சொல்லப்படவில்லை. பெற்றோர்கள் தம் கடமையைச் செலுத்தாவிட்டால் பெண் ருதுவான பின் 3-ருதுகாலம் பொறுத்திருந்து அதற்குப் பின் தானே ஸ்வயம்வரம்செய்து கொள்ளலாமென்றிருக்கிறது; அப்படியே நடந்தும் வந்திருக்கிறது. ஆகையால் இதுவெல்லாம் "வேகாப் பருப்பு" என்று பதில் சொல்லிவிட்டார்.

பின்னும் அந்த அம்மாளோடு நாம் "ருதுமதி விவாஹ மசோதா" வுக்குப்பரிந்து பேசியதில் அவர் தாம் கொண்ட அபிப்பிராயமே பலப்படுகிறதாகச் சொன்னாரேயன்றி நம்முடைய நியாய வாதங்களில் சிறிதும் "காரஸாரம்" இருப்பதாக ஒப்புக்கொள்ளவில்லை. "நேதி, நேதி" யென்று எல்லாவற்றையும் தள்ளிவிட்டார். பின்னும் அவர் சொன்னவற்றில் ஒன்று சமயோசிதமாகவும் சந்தர்ப்பானுஸாரமாகவு மிருந்ததாகப்பட்டது. அது வேடிக்கையாகச் சொன்னதாயினும் வேடிக்கையிலும் உண்மை யிருக்கிறதுண்டே!

"இப்பொழுது வழக்கும் வியாஜ்யமும் மேலிட்டு எல்லாரும் எடுத்ததற்கெல்லாம் கோர்ட்டேறி ஜயித்தாலும் தோற்றாலும் ஒட்டாண்டியாகிவருகிறார்கள். இப்பொழுதுள்ள விவகாரங்களைத் தீர்க்கவே வருஷத்துக்கு இரண்டு ஹைகோர்ட்டு ஜட்ஜிகள் புதிதாக நியமித்து வர வேண்டியிருக்கிறது. இன்னமும் விவாஹ வியாஜ்யங்களும் ஏற்பட்டால் வருஷத்துக்கு மூன்று ஜட்ஜிகள் நியமிக்கலாம். "நாடெல்லாம் வாழக் கேடொன்றுமில்லை" யென்பது முன்னோர் சொன்ன பழமொழி. நாடு வாழ்ந்தாலும் தாழ்ந்தாலும் விவஹாரம் வழக்குகள் விர்த்தியாய்க்கொண்டே யிருக்கும். ஜட்ஜிகளும் அதிகரித்துக்கொண்டே யிருப்பார்கள்: இந்திய ஜட்ஜிகள் தொகை இன்னும் அதிகரிக்கும். அது நமக்கு லாபம் தானே! பசுவைக்கொன்று செருப்புதானம் செய்தாலும் அவன் தானம் வாங்கினவனுக்கு எப்படியும் "தாத்தா"="கொடையாளி" யென்பதற்குச் சந்தேகமில்லை" யென்று சொன்னார்.

[இதற்கு பதில் எழுதுகிறவர்கள் தூஷணையின்றியும் சுருக்கமாயும் பதில் எழுதினால் அவைகளைப்பார்த்துப் பிரசுரிக்க விவேக சிந்தாமணி யிடங்கொடுக்குமென்று எண்ணுகிறோம்.]

## THE MADRAS SOCIETY FOR THE PROTECTION OF CHILDREN.

As we go to press, we are favoured with an exceedingly touching letter addressed to the Honorary Secretary of the Social Service Branch of the Ananda Mission by the Honorary Secretary of the Madras Society for the Protection of Children.

He has kindly sent us three copies of the last annual report of the Society appealing to all interested in the potential wealth of child-life to help the Society in their highly important work of saving innocent children from degradation and shame. Children are the greatest of all national assets and every case of child-life saved from degradation is full of possibilities to national life which no one can calculate. Let those who choose become "more and more calculating" as men and less and less efficient in the discharge of their onerous responsibilities as parents, citizens and trustees of the future. The real workers and labourers in the 'Vineyard' are always few: but they labour well and what they sow with the sweat of their brow, the nation will reap in abundance. "I work, because my Father works" is the saying and justification of the work of the greatest saviour of the world and that is and ought to be the motto of all who are engaged in Social Service in spirit and in truth which is one of '*Samashti Sevai*"—the worship of the All in the service of humanity. "I should consider myself and the Society fortunate if I can enlist your co-operation in our work." We commend this appeal to the young souls that are engaged or are preparing themselves to engage in Social Service in the spirit of *Samashti-Sevai*.

## சென்னை பால ரக்ஷண்ய சபையார்.

இச்சபையின் கௌரவ காரியதரிசியவர்கள் "பாலபோத ஸமஷ்டிசேவைஸாதனா சங்கத்தின்" கௌரவ காரியதரிசிக்கெழுதிய கரலிகிதமொன்றை நமது பார்வைக் கனுப்பியதற்காக வந்தனங்கூறி அதிற்கண்டுள்ள விஷயம் பால சிக்ஷார்த்தமானதாக விருப்பதால் அவருடைய உள்ளக்கருத்தை வெளியிட்டெழுதுகிறோம். ஒரு தேசத்தின் உண்மைச் செல்வம் அதிலுள்ள பொன் வெள்ளி சுரங்கங்களில் இருப்பதாக நினைக்கக்கூடாது. ரத்னங்களிலெல்லாம் "ஜீவரத்னம்" மதிப்பேறப்பெற்றது. அந்த ஜீவரத்னத்துக்கு ஆதிமூலமாயுள்ளது பாலப் பருவம். இப்பருவத்தில் ஜீவன் தப்பு வழியிலிறங்கி கெட்டுப் போகாமல் காப்பது தேசத்தின் யோகக்ஷேமத்துக்கு இன்றியமையாத கடமையாயிருக்கிறது. "அப்ராப்த ப்ராபணம் யோக:" என்றபடி, பெறற்கரியபேறைப் பெருமுயற்சியாற் பெறுதலே யோக ஸாம்ராஜ்யம். அப்படிப்பெற்றதைக் காப்பாற்றுதல் க்ஷேமம். இதையே "க்ஷேமௌ லப்தஸ்ய பாலனம்" என்றார். ஆகையால் பாலப் பருவத்தில் குழந்தைகளைக் காத்துரக்ஷிப்பது லோகதர்மத்தில் தேசவளப்பத்துக்கு இன்றியமையாத கடமையாகும். இதைச் செய்துவருவார் எல்லாரும் ஸமஷ்டிசேவை தர்மத்தை யனுசரித்து ஊருக்குழைத்து வருகிறவர்களாவார்கள். மேற்படி பாலரக்ஷண்ய சபையின் காரியதரிசியவர்கள் அச்சபையின் தர்ம காரியத்தை நடத்த அர்த்தசகாயமின்றிக் குறைப்படுகிறார் என்று கேட்ட நாம் அவருடைய உயர்கடனைச் செலுத்த சகாயமாக நம்மாலான உதவியை யளித்து இது அங்கீகாரமாயிருக்குமானால் அவர் சொற்படி நடந்துகொள்வதாக வெழுத, அவர் மனிதர்கள் துட்டுப் பிடிப்புள்ளவர்களாய் லாபத்தின் மேலே கண்ணாயிருக்கிற இக்காலத்தில் அவர் முயற்சி எம்மட்டும் பலிக்குமோ பார்ப்போமென்று எழுதியிருக்கிறார். உலகரக்ஷகர்களாய் அழியாக் கீர்த்திபெற்றவர்களெல்லாம் காசைத்தூசாய் நினைத்து அதன் பெருமையையும் சிறுமையையும் அறிந்து விலக்கினவர்களேயன்றி பணத்தைக் கொண்டுதான் காரியமாகவேண்டுமென்று நினைத்தவர்களல்ல. பணமோ ஜடவஸ்து. மனிதனோ சின்மயனாகத்தக்கவன். அறிவு அறியாமைக்கு அடிமைப்பட்டிருக்குமோ? லோகோபகாரமான காரியங்கள் நடக்கவேண்டியிருந்தால் அதைச் செய்விப்பவன் லோககர்த்தாவாகிய ஈசுவரன். அவன் கர்த்தா, நாம் கருவி. "வல்லவனுக்குப் புல்லாயுதம்" என்றப்படி கர்த்தன் ஸர்வவல்லமையுள்ளவனானால் அவனுக்கு காரியத்துக்குத்தக்க கருவி தேடியுபயோகிப்பதோ கஷ்டமாகும்? இல்லை! இல்லை! ஆதலால் ஸமஷ்டிசேவை ஸாதனாஸங்கத்தவர்கள் பால ரக்ஷண்ய வேலையில் அவர்கள் ஊக்கத்தைச் செலுத்துவார்களென்று நம்பி இதை யெழுதலானோம்.

## THE PRICES ENQUIRY COMMISSION.

### அகவிலை யேற்றத்தைப்பற்றி விசாரிக்க ஏற்பட்ட கமிஷன்.

1910-ம் வருஷம் மார்ச்சு மாஸம் அகவிலை யேற்றத்தின் காரணங்களைப்பற்றி விசாரித்து ரிபோர்ட்டு செய்யவென்று இந்தியா கவர்ன்மெண்டார் மிஸ்டர் தத்தா அவர்களைத் தலைவராகக்கொண்ட கமிஷன் ஒன்று நியமித்தார்கள். அவருக்கு உதவியாக டக்கா காலேஜில் செல்வநூல் அல்லது அர்த்த சாஸ்திரத்தில் விற்பன்னராகிய மிஸ்டர் ஜி. பிண்ட்லே ஷிர்ராஸ் அவர்களையும், அரசிறை இலாகாவைச் சேர்ந்த மிஸ்டர் எஸ். டி. குப்தா அவர்களையும் கூட நியமித்தார்கள். மேற்கண்ட இருவர்களும் 1910ஸு மேமீ அவர்கள் புதிய வேலையை ஒப்புக்கொண்டார்கள்.

மிஸ்டர் தத்தா (Mr. K. L. Datta) அவர்கள் இப்பொழுது சென்னையில் அக்கௌன்டென்ட் ஜெனரலாகவிருக்கிறார். இவரை விசாரித்து ரிபோர்ட்டு செய்யக் கேட்டுக்கொண்டதின் விவரம் பின்வருமாறு:—

(1) சென்ற 15-வருஷ காலத்தில் இந்தியாவில் விலையேற்றம் உண்மையாக எவ்வளவு அதிகம்? இது எல்லா சாமான்களின் விலையையும் பாதிக்கிறதா, ஆகாரத்துக்கு வேண்டிய தானியங்களை மட்டும் பாதிக்கிறதா? இடங்களுக்குத் தக்கபடி விலையேற்றத்தில் மாறுதல் உண்டா?

(2) உலகரீதியான காரணங்களாலுண்டான விலையேற்றம் எவ்வளவு? ஸ்தலவிசேஷத்தாலுண்டான விலையேற்றம் எவ்வளவு?

(3) விலையேற்றம் நிரந்தரமானதா? அல்லது காலபேத விசேஷமானதா?

(4) அது நிரந்தரமானதாயிருந்தால் அதனால் தேசத்தின் செட்டு-மட்டுஜீவனம் பொதுவாய் எப்படி பாதிக்கப்படுகிறது? பல்சமூகத்தார்களையும் அது எப்படி பாதிக்கிறது?

மிஸ்டர் டட்டா அவர்கள் விசாரணையை முடித்து ரிபோர்ட்டு செய்திருக்கிறார்.

விலையேற்றம்:—1897-ம் வருஷத்தில் அகவிலை யேற்றம் 126, 1896-ல் 106.

| | | |
|---|---|---|
| 1900-ல் 122 | ... | 1899-ல் 104. |
| 1904-ல் 106 | ... | 1908-ல் 143. |
| 1910-ல் 132 | ... | 1912-ல் 141. |

பஞ்சம் முதலான காலபேதவிசேஷங்களால் உண்டாகும் ஏற்றத்தை நீக்கிப் பார்த்தால், அகவிலையேற்றம் 1890-94-ல் 100-ஆக விருந்தது 1908-12-ல் 137-ஆக அதிகரித்தது. இது ஸ்திரமான விலையேற்றம். 1905-லிருந்து விலையேற்றம் விசேஷமாகத் தெரிகிறது. 1905-09-ல் 100-க்கு 31 அதிகம்; 1910-12-ல் 100-க்கு 36-அதிகம்.

சரக்குகள்:—தோல்வகைகள், ஆகாரதானியங்கள், துவரைவர்க்கம், தானியவர்க்கம், கட்டட சாமான்கள், எண்ணெய் வித்துகள், இவை 100-க்கு 40-க்கு மேல் விலையேற்றம்.

ஸ்தலவிஸ்தீரணம்:—பஞ்சம், கருப்பு இவைகளால் பாதிக்கப்பட்ட இடங்களில் விலையேற்றம் அதிகம். இவையில்லாத இடங்களில் முக்கியமாய் அஸ்ஸாமில் விலையேற்றம் குறைவு.

காரணங்கள்:—விலையேற்றத்தின் காரணங்கள் உலகரீதியானவை. தங்கநாணயம் உண்டானபிறகு இந்தியா உலகத்திலுள்ள தேசங்களோடு நெருங்கி சம்பந்தப்பட்டதாயிருக்கிறது. இதரதேசங்களின் அகவிலை இந்தியாவையும் பாதிக்கிறது. காலமழை சரியாகப் பெய்யாமையால் விலை மாறுபடுகிறதுமுண்டு. இதனால் மகசூல் குறைய அது விலையேற்றத்தையுண்டுபண்ணுகிறது. இந்தக் காரணம் அதிகமாக விலையை பாதித்திருக்கிறது.

இன்னொரு காரணம்:—ஜனத்தொகையின் அதிகரிப்புக்குத் தக்கபடி ஆகாரத்துக்குதவும் தானியங்களின் விளைவு அதிகரிக்காமல் குறைந்து வந்திருக்கிறது. இதனால் தானியவிலை மேன்மேலும் அதிகரித்து வந்திருக்கிறது.

இந்தியாவில் விளையும் சரக்குகளுக்கு இதர தேசங்களில் தேவைஅதிகம். ரயில் சார்ஜ், கப்பல் சார்ஜ் சகாயத்தால் சரக்குகள் இலகுவாக ஏற்றுமதியாகி வந்திருக்கின்றன. இந்தி

யாவிலேயே ஐசுவரியவிர்த்தியினாலும் உள்ளுடை சுகவிர்த்தியாலும் சரக்குகளுக்கு கிராக்கி ஏற்பட்டிருக்கிறது.

போக்குவரத்து சாதனங்கள் :—போக்குவரத்து சாதனங்கள் மலிந்து இதனாலும் சரக்குகளுக்கு தேவையதிகமாகி விலை கிராக்கியேற்பட்டிருக்கிறது. 1891-ல் 17,000 மைல் இருப்புப்பாதை 1901-ல் 24,000 மைல் ஆகவும், 1912-ல் 32,000 மைல் ஆகவும் விர்த்தியாகியிருக்கிறது. ரோட்டுகளும் இப்படியே விர்த்தியாகி யிருக்கின்றன. தந்தியனுப்பும் சாதகமும் அப்படியே; ரயில் சார்ஜ் கப்பல் சார்ஜ் மலிவு.

கப்பல், ரெயில் சாதகங்களால், சரக்குகளுக்கு ஐரோப்பா மேற்குப்பக்கத்து தேசங்களிலுள்ள விலை துறைமுகங்களிலும், துறைமுகப் பட்டணங்களின் விலை உள்நாடுகளிலுமாகப் பரவி கிராக்கியை உண்டு பண்ணியிருக்கிறது. கொடுக்கல்வாங்கல் நாணயசாதனங்கள் அதிகமாக அதனாலும் வியாபாரம் விர்த்தியாகி சரக்குகளுக்கு விலை கிராக்கி யேற்பட்டிருக்கிறது. நாணயமதிப்பு, பாங்கி சாதனங்கள், பொன் விளைவுமிகுதி முதலான காரணங்களால் நிரந்தரமான விலைகிராக்கி யேற்பட்டிருக்கிறது. நாசகாரணமான யுத்தங்களாலும், சைனிய தளவாடங்கள் முஸ்தீபுகளில் அதிகப் பணம் செலவுசெய்து வந்திருப்பதாலும் சரக்குகளுக்கு விலைகிராக்கி யேற்பட்டிருக்கிறது. இங்கிலாந்தில் மாத்திரம் யுத்ததளவாடங்கள் செலவு 1895-ல் 3 கோடியே 54-லக்ஷத்து 45-ஆயிரம் பவுனுயிருந்தது 1911-ல் 6-கோடியே 83-லக்ஷத்து 66-ஆயிரம் பவுனாக அதிகரித்திருக்கிறது.

இந்தியாவில் விலையேற்றம் இன்னம் கொஞ்சகாலத்துக்கு அதிகரித்து வரலாம். விலையேற்றத்தின் காரணங்களை யூகித்து ஆராய்ந்து பார்த்தால், பஞ்சம், கருப்பு முதலான கால பேத சம்பந்தமான காரணங்களை நீக்கிப்பார்க்க இப்பொழுதுள்ள விலை கிராக்கி யின்னும் அதிகரிக்காவிட்டாலும் இதைவிடக் குறையாது என்று சொல்லும்படியாக விருக்கிறது.

விலையேற்றத்தின் பலன்:—இந்தவிலையேற்றத்தின் பலன் இந்தியாமுழுமைக்கும் மொத்தமாகப் பார்க்கில் அனுகூலமாகவே யிருக்கிறது. இதரதேசங்களில் செலவாகும் தொகையைச்செலுத்த விலை கிராக்கியினால் விளைபொருள்களின் ஏற்றுமதி முன்னிலுமிப்போது குறைந்திருந்தால் போதுமானது. நிலசுவான்களுக்கு குத்தகையதிகம் கிடைக்கிறது. வியவசாயிகளுக்கும் வேலையாட்களுக்கும் அதிக லாபம், அதிககூலி கிடைக்கிறது. நிரந்தரமான மாதசம்பளம் வாங்கி ஜீவனம் செய்கிறவர்களும், கவர்ன்மெண்டு பத்திரம் போன்றவற்றில் முதலிட்டு ஜீவிப்பவர்களும், ஸ்திரமாக ஏற்பட்ட (கட்டணம்) வாங்கிப் பிழைப்பவர்களும் தான் விலை கிராக்கிக்கேற்ற லாபமின்றி நஷ்டப்பட்டு வருகிறார்கள். ஜனசமூகத்தார் லாப நஷ்டங்களும் விலையேற்றத்துக்குத் தக்கபடியே யேற்பட்டிருக்கிறது.

---

## SHORT STORY.

"Judgment: Temporary and Eternal."

### "அரசன் அன்று கொல்லுவான். தெய்வம் நின்று கொல்லும்."

சுந்தரம் என்பவர் ஒரு பங்களாவில் வசித்தார். அவர் வயது சென்றவர். சர்க்கார் உத்தியோகத்தில் ரூ. 50,000 வரையில் சம்பாதித்துவிட்டார். இப்பொழுது ரூ. 150 உபகார சம்பளம் வேறு மாதாமாதம் பெற்றுக்கொண்டு வருகிறார். ஆதலினால் ஜீவனத்தைப் பற்றி அவருக்குக் கொஞ்சமும் கவலை கிடையாது. நான் சுந்தரத்திற்கு மிகவும் வேண்டியவனாதலால், ஞாயிற்றுக்கிழமை யன்று சுந்தரத்தைப் பார்க்கப்போயிருந்தேன். என் பெயர் "ரத்தினம்.", சென்னையில் விளங்கும் தினசரிப்பத்திரிகைகள் ஒன்றில் உப பத்திராசிரியன். நான் போன சமயத்தில் சுந்தரம் கண்ணை மூடிக் கொண்டு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்துக்

கொண்டிருந்தார். தட்டி எழுப்பினேன். "தெரியாது, முடியாது, என்கிற வார்த்தைகள் அகராதியிலிருக்கின்றனவே ஒழிய புத்திசாலிக்கு இல்லை": கொஞ்சமாவது புத்தியிருந்தால் "சன்னதித்தெரு கொலை"யைப் பற்றி முன்னமேயே கண்டுபிடித்திருக்க மாட்டார்களா?—என்றார்.

சென்ற சில மாதங்களாக கொலைகளும் களவுகளும் மிகவும் ஜாஸ்தியாய் நடந்துவந்தன. இவைகளின் பைத்தியம் சுந்தரத்தைப் பிடித்திருக்கிறதென்று தெரியுமாதலால், நான் சுந்தரம் சொன்னதினால் ஆச்சரியப்படவில்லை. அருகிலிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்துக்கொண்டு என்ன சொல்லப்போகிறாரென்று காத்துக்கொண்டிருந்தேன். யோகக்ஷேமம் கூட விசாரிக்கவில்லை. சுந்தரத்தை இச்சமயங்களில் அவர் சொல்வதைவிட்டு வேறு ஏதாவது கேட்டால் கோபித்துக்கொள்ளுவார். அதனால் நான் "மௌனம் கலகம் நாஸ்தி" என்று உட்கார்ந்துக்கொண்டிருந்தேன்.

சுந்தரம் என்னைப் பார்த்துச் சொல்லுகிறார்:—

"There is no such thing as mystery in it provided Intelligence is brought to bear upon it.

"எங்கு உனது புத்தியை உபயோகப்படுத்துகிறாயோ அங்கு உன் அறிவுக்கெட்டாதது ஒன்றுமில்லை." நமது போலீஸ் உத்தியோகஸ்தர்கள் மாத்திரம் இதை ஞாபகத்தில் வைத்து வேலை செய்தார்களானால், ஜனங்கள் தைரியமாய் அவர்களை நம்பியிருக்கலாம். நாம் என்ன செய்யலாம்! முட்டாள்கள்! முதலில் ஆரம்பிக்கும்பொழுதே தவறுகிறார்கள்!—என்றார்.

அதற்கு நான் "சன்னதித்தெரு கொலை"யில் கூடவா போலீஸார் பேரில் குற்றம் கூறுகிறீர்கள்? அதைப்போல் தலைகால் தெரியாத விஷயம் இதுவரையிலும் நான் கண்டதில்லையே! என்றேன். அதற்கு சுந்தரம் "அதைப்போல் சுலபமானது ஒன்றும் கிடையாது" என்றார். நான்! "அப்படியானால் தாங்கள் துப்பறியும் இலாகாவில் சேருகிறதுதானே! நன்றாகப் பணம் சம்பாதிக்கலாமே!" என்றேன்.

அதற்கு அவர்: வேலையில்லை! இதை நான் அந்த புத்தியில்லாதவர்களிடம், கூறினால் (Misguided though well-meaning police) என்னை பரிகஸிப்பதோடு கூட, பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பினாலும் அனுப்புவார்கள். அதுவுமல்லாமல், நான் "அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்" என்பதிலும் "தான் செய்யும் காரியத்தின் பலனை மனிதன் அனுபவியாமற் போகான்"(The Law of Karma) என்பதிலும் நம்பிக்கையுள்ளவன். அத்தெரு கொலையின் விசாரணை நடந்து மிக நாளாய் விட்டதால் நான் அவைகளை உனக்கு மறுபடியும் முதலிலிருந்து சொல்லி வருகிறேன். கேட்டுவா!" என்று, ஜனங்கள் என்றும் மறக்கமுடியாத அப்பயங்கரமான கொலையின் விவரங்களை ஆதியோடந்தமாக விவரித்துச் சொன்னார். அதாவது:—

"டிஸம்பர் மாதம் 10-ந்தேதி மாலை மூன்று மணிக்கு 'ஷோக்லால்' என்னும் மார்வாடி மங்கவேலு என்பவன் வீட்டிலிருந்து தனக்கு வரவேண்டிய பாக்கியாகிய 500 ரூபாயை வசூல் செய்யப்போனான். மங்கவேலு ஆவேசம் வந்தவன்போல இங்குமங்கும் கூத்தாடிக்கொண்டிருந்தான். அவனது மனைவி அழுதுக்கொண்டிருந்தாள். மங்கவேலு மார்வாடியைக் கண்டு ஏய், நீ எனக்கு இப்பொழுது ரூ50 கொடுத்தாயானால் உனக்கு மிகவும் லாபம் வைத்து ரூபா 1000 தருகிறேன். எனக்குக் குறைந்தது ரூ 10,000 வரும், என்றான். மார்வாடி ரூபாய் வரும் வழியைச் சொன்னாலொழிய கேட்ட ரூபாயைக் கொடுப்பவனாகத் தோன்றாததால் அப்படியே சொன்னான்.

"நான் 30 வருஷங்களுக்கு முன் ஜனரல் ஆஸ்பத்திரியில் வைத்தியப்பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தேன். என்கூட, நாராயணசாமி, குப்புசாமி என்று, இருவர்கள் படித்துக்கொண்

டிருந்தார்கள். எங்கள் மூவருக்கும் ஒரே அறைதான். ஒருநாள் சாயங்காலம் குப்புசாமி நிறைய பணம் கொண்டுவந்தான். மறுநாள் அறையில் கொல்லப்பட்டுக் கிடந்தான். நான் அன்றிரவு முழுவதும் ஆஸ்பத்திரியில் வேலையாயிருந்தேன். நாராயணசாமி மாத்திரம்தான் அகப்படவில்லை. அவன்தான் குற்றம் செய்தவனென்று போலீஸார் நினைத்தார்கள் ஆனால் நாராயணசாமி போன இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் தென்னாபிரிக்காவுக்கு ஓடிப்போய்விட்டான். அங்கிருந்து என்னைக் கொஞ்சம் பணஉதவி செய்யும்படி கேட்டான். நான் ரூபா 150 தபால் மூலமாக அனுப்பிவைத்தேன். அவன் அதைக் கொண்டு தோட்டவியாபாரம் செய்து பணக்காரனாய்விட்டான். எனக்கு கொஞ்ச நாட்களுக்குமுன் ரூ500 அனுப்பிவைத்தான். நான் கொஞ்சநாட்களுக்குமுன் ரூ. 10,000 அனுப்பாவிட்டால் போலீஸாரிடம் அவன் குப்புசாமியைக் கொன்றவன் என்று கூறிவிடுவேனென்று எழுதினேன். அதற்கு அவன்தான் கொஞ்சநாட்களுக்குள் இந்தியாவிற்கு வரப்போவதாயும் அப்பொழுது என்னை நேரில் பார்ப்பதாகவும் எழுதியிருந்தான். இவைகள்தான் அவை என்றான். அவைகளில் எழுதியிருந்ததாவது பின்வருமாறு :—[நாராயணசாமி தனபாக்கியன் என்று பேர் வைத்துக் கொண்டிருந்தான். அவனை ஜனங்கள் தென்னாபிரிக்கா கோடீசுவரன் என்று அறிவார்கள்.]

அவன் எழுதியது:

முதல் கடிதம்.

ஐயா,

நீர் மிகவும் அநியாயம் பண்ணுகிறீர். நான் ஏழைஸ்திதியில் இருந்தபொழுது உதவி புரிந்ததற்காக நான் உமக்கு எவ்வளவோ பதிலுதவிகள் செய்திருக்கிறேன். நான் சில நாட்களில் "நீலாயதாக்ஷி" கப்பலில் பம்பாய் துறைமுகம் வந்திறங்குவேன். சென்னை மாநகருக்கும் வருவேன். அப்பொழுது நீர் என்னைநேரில் பார்த்தால் உமக்கு எவ்வளவு உதவி செய்யலாமோ அவ்வளவையும் செய்வேன். இதற்கு முன் ஒரு தடவை நாம் நண்பர்களாய் இருந்ததற்காகவே யன்றி நீ பயமுறுத்துவதற்காகவல்ல என்று அறியவும்.

இப்படிக்கு,
தனபாக்கியன்.

இரண்டாம் கடிதம்.

ஐயா,

நான் இன்று நீலாயதாக்ஷி கப்பலிலிருந்து வந்திறங்கினேன். 10-ந்தேதி யன்று மாலை 6-15 மணிக்கு என்னை ஸ்டேஷனில் பார்க்கலாம். கறுப்பு சொக்காயும் தலைப்பாகையும் தரித்திருப்பேன்.

பம்பாய் துறைமுகம்,
டிஸெம்பர்மீ 8உ

இப்படிக்கு,
தனபாக்கியன்.

இக்கடிதத்தைக் கொண்டுதான் மங்கவேலு கூத்தாடிக்கொண்டிருந்தான், சிறு வயதிலேயே கொலைபுரிந்தவன் தனது கணவனை என்ன தான் செய்மாட்டான் என்று அஞ்சி அவனது மனைவி பயந்தாள்.

இக்கடிதங்களைப் பார்த்த பிற்பாடு மார்வாடி ரூபாய் 50 கடன் கொடுத்தான். அப்பணத்திற்கு புது உடுப்புகள் வாங்கிக் கொண்டு மங்கவேலு தனபாக்கியனைப்பார்க்கச் சென்றான். அன்று முழுவதும் அவன் வீட்டிற்கு வரவில்லை. அவனது மனைவி பயந்து போலீஸாருக்குத் தெரிவித்தாள். 31-ந்தேதி சாயங்காலம் சென்னை துறைமுகத்தில் வாராவதியின்கீழ் பலவருஷங்களாக உபயோகப்படுத்தப்படாத ஒரு படகில் ஒரு பிணம் கிடந்தது. மிகவும் அழுகிநாற்றமெடுத்து உருத்தெரியாமலிருந்தது. ஆனால் அதன் பேரிலிருந்த கடியார சங்கிலி, மோதிரம் முதலியவைகளால் மங்கவேலுவின் சரீரம் என்று அவன் மனைவியால் சொல்லப்பட்டு ருஜு செய்யப்பட்டது.

## A Millionaire in the Dock.

கோடீசுவரன் குற்றவாளியாக்கப்பட்டது.

மங்கவேலுவின் மனைவி கோடீசுவரன் தான் கொலை செய்திருக்க வேண்டுமென்றாள்.

போலீஸாரும் அப்படியே எண்ணினர்கள். ஆனல் நான் அப்படி நினைக்கவில்லை. மணி தன் கொலை செய்யப்பட்ட இடத்தை நான் போய்ப் பார்த்தேன். அந்த மாலையில் ஒரு பிராணிகூட இருக்கமாட்டாது. கூக்குரல் கொஞ்சமும் கேட்காது. ஒரு பயங்காளி கொலை செய்வதற்கு சரியான இடம் அதுவே. எப்பொழுதும் குற்றத்திற்குக் காரணமிருக்க வேண்டும். போலீஸார் கோடீசுவரன் தான் குப்புசாமியைக் கொன்றவ னென்று மங்க வேலு சொல்லி விடுவானென்று பயந்து கொன்றதாக நினைத்தார்கள். ஆனல் நான் அப்படி நினைக்கவில்லை.

தென்னபிரிக்காவில் தனியாகப்போய் 150 ரூபாயைக்கொண்டு கோடீசுவரனகும்படியான திடகாத்திரனும் தைரியசாலியுமாயிருக்கும் ஒரு ஆண்மகன் மங்கவேலுவைப்போன்றவனு க்கு எப்பொழுதும் பயப்படான். மங்கவேலு வோ குடித்துக் கெட்டவன். கோடீசுவரன் கொலைசெய்ததற்கு தக்க ஆதாரங்கள் அவ னிடம் கிடையாது. ஆங்கில நீதி ஸ்தலத்தில் 30 வருஷத்திற்கு முன் கொலை செய்தா னென்று ஒரு குடியன் பேச்சைக்கேட்டு கோடீசுவரனை தண்டிக்கமாட்டார்கள். கோடீ சுவரன் நீதிஸ்தலத்தில் கைதிக்கூண்டில் நின்ற பொழுது அவனைப்பார்த்தாயா! முழுவதும் க்ஷவரம் பண்ணியிருந்தான். விசாரணையானது நடந்துக் கொண்டிருக்கும் பொழுது, தன க்கு அதில் ஒரு ஸம்பந்தமுமில்லாதவன்போல் நடந்துக்கொண்டான். மங்கவேலுவின் மனைவி யும் ஷோக்லாலும் முதல் சாக்ஷிகளாக விசாரிக் கப்பட்டார்கள். மங்கவேலுவின் மனைவி தனது கணவனைக்கொன்ற கொலைபாதகனை கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேனென்று விட்டாள். அவளும் ஷோக்லாலும் தாங்கள் முன்சொன்ன கதையைத்திருப்பிச் சொன்னர் கள்.

பிறகு 1218-ம் நம்பர் போலிஸ் சேவகன் சாக்ஷியாகக் கூப்பிடப்பட்டான். அவன் தான் சில நாட்களுக்குமுன் கோடீஸ்வரனை அவ னது இருப்பிடமாகியபூந்தோட்டத்தில் கைது செய்ததை பற்றி வாக்குமூலம் கொடுத்தான். தான் அவனைக் கைதுசெய்வதற்காகக் கொண் டுவந்த உத்தரவைக் காண்பித்ததும் அவன் மிகவும் ஆச்சரியப்பட்டானென்றும், பிறகு தன்னல் ஒன்றும் செய்ய முடியாதென்று அறிந்து அவன் பின்னேடு போலீஸ் ஸ்டேஷ னுக்கு வந்ததாகவும் கூறினன்.

பிறகுஸ்டேஷன் கூலியாள் 'முத்தன்' விசாரி க்கப்பட்டான். அவன், டிஸம்பர்மாதம் 10-ந் தேதியன்று பம்பாய்வண்டியானது 6-15-மணி க்கு வந்தபொழுது தான் இருந்ததாகவும், மேற்படி வண்டியிலிருந்திறங்கிய கறுப்புச் சொக்காயும் தலைப்பாகையும் தரித்திருந்த ஒரு கனவான் அவனைக் கூப்பிட்டு சாமான்களை ஒரு வண்டியில்வைக்கும்படிச் சொன்னதாக வும், தான் அப்படியே ஒரு 'கோச்' வண்டியில் வைத்ததாகவும் சொன்னன். 35-வது நம்பர் கோச்வண்டி ஆள் 'மாரிமுத்து' சொன்னது:—

"நான் பத்தாந்தேதியன்று என் வண்டியு டன், சவாரிக்காகக் காத்துக்கொண்டிருந்து 6-15 மணி வண்டிவந்ததும் முத்தன் என்னைக் கூப்பிட்டு, வண்டியில் சிலசாமான்களை வைத் தான். அப்பொழுது அக்கனவான் இன் னெருவனேடு பேசிக்கொண்டு வந்தார். அவர் "கொஞ்சநேரம் இரு" நான் இதோ வருகிறேன் என்று சொல்லி கூடவந்தவனேடு பேசிக்கொ ண்டேபோனர். இப்புகைப்படத்தினல் கூட இருந்தவன் மங்கவேலு என்று அறிகிறேன்." 6-15-மணிக்கு மங்கவேலுவோடு போன கோடீ சுவரன் தனியாக 8-45-மணிக்குத் தான் திரு ம்பி வந்தார். நான் அவரை பூந்தோட்டத்தில் விட்டபொழுது 9-15-மணி.

பிறகு பூந்தோட்டத்து வேலைக்காரர்கள் விசாரிக்கப்பட்டார்கள். அவர்கள் கோடீசு வரன் 10ந்-தேதி இராத்திரி 9-15-மணிக்கு மூட்டை முடிச்சுக்களோடு ஒரு கோச்வண்டி யில் வந்திறங்கினதைப்பற்றிச் சொன்னர் கள். ஜனங்களெல்லாம் கோடீசுவரன் தூக் கிடப் படுவான் என்று நினைத்தார்கள். பிராசி

கியூஷன் தரப்பு வக்கீலின் முகம் மலர்ந்தது. போலீஸ் இன்ஸ்பெக்டர் தன் சாமர்த்தியத்தைப்பற்றி தானே மகிழ்ந்துக் கொண்டு கனைத்தார்.

6-15-மணிக்கு மங்கவேலுவோடு போன கோடீசுவரன் 8-45-மணிக்குத்தான் திரும்பினான். அப்பொழுது அவன் தனியாகத்தான் வந்தான். கோடீசுவரனைப் பூந்தோட்டத்திலிறக்கின பொழுது 9-15-மணி. பிராசிகியூஷன் தரப்பு வக்கீல் எழுந்துப் பேசலானார்.

ஜட்ஜிதுரையவர்களே ! 10-ந்தேதி யன்று மாலை 6-15-மணிக்கு கைதியானவன் மங்கவேலுவைப் பார்த்திருக்கின்றான். அவன் கூட 6-15-மணிக்குப் போனவன் 8-45-மணிக்குத் திரும்பியிருக்கின்றான். கைதியோ பட்டணத்திற்குப் புதிது. போய்பார்ப்பதற்கு சிநேகிதர்கள் யாருமில்லை. கைதி மங்கவேலுவை 6-15-மணியிலிருந்து 8-45-மணிக்குள் கொன்றானென்பதில் சநதேகமில்லை—யென்று சண்டப்பிரசண்டமாய்ப் பேசி முடித்தார்.

எல்லா ஜனங்களும் கோடீசுவரன் தூக்கில் தொங்கலாடுவதுபோல நடுப்பகலிலேயேஸ்வப்னம் கண்டார்கள்.

ஆனல் கைதியோ அப்பொழுதுதான் தூக்கத்தைவிட்டுக் கண்விழித்து தனது வக்கீலுடன் பேசினான். கோடீசுவரன் வக்கில் பேசலானார். "தர்மதுரையவர்களே! எனது கக்ஷிக்காரன் நிரபராதி. 10-ந்தேதி யன்று கொல்லப்பட்டதாகக் கூறப்படும் மங்கவேலுவை 16-ந்தேதி உயிரோடுபார்த்த இருசாக்ஷிகளைக் கூப்பிடுகிறேன்" என்றார்.

காபிகிளப் முத்துவேலுமுதலியாரும் அவரது ஆளும் கூப்பிடப்பட்டார்கள்.

முத்துவேலு முதலியார் சொன்னது:—நான் பட்டணத்தில் ஒரு மிலிட்டேரி ஓட்டல் வைத்திருக்கிறேன். 10-ந்தேதியன்று மத்தியானம் ஒரு ஆசாமி வந்து டீ (தேத்தண்ணீர்) சாப்பிட்டார். போகும்பொழுது ஒரு குடையை வைத்துவிட்டுப் போய் விட்டார். ஹோட்டல் வழக்கப்படி அக்குடையை எடுத்து வைத்திருந்தோம். பிறகு 16-ந்தேதி மத்தியானம் அவர் மறுபடியும் வந்து 'டீ' சாப்பிட்டு விட்டு தான் வைத்துவிட்டுப்போன குடையை எடுத்துக் கொண்டுபோய் விட்டார். போனதும் அவர் மேஜையின் கீழ் ஒரு பாக்கெட் புஸ்தகம் கிடந்தது. அது அவர் போட்டுவிட்ட புஸ்தகம் என்று நினைக்கிறேன். இப்புகைப் படத்தினல் அவர் மங்கவேலு வென்று அறிகிறேன். மங்கவேலுவின் மனைவியும் ஷோக்லாலும் அப்பாக்கெட் புஸ்தகம் மங்கவேலுவினது தான் என்றார்கள்.

பிறகு குற்றவாளியின் வாக்குமூலம் படிக்கப்பட்டது. அதில் சொல்லியிருந்ததாவது:—நான் என்னுடைய சொந்த முயற்சியினல் தனவந்தனனேன். நான் ஜெனரல் ஆஸ்பத்திரியில் படித்ததே கிடையாது. என்னை எப்பொழுதும் யாரும் நாராயணசுவாமி என்கிற பெயரிட்டுக் கூப்பிட்டதில்லை. நான் 10-ந் தேதியன்று சென்னை வந்தது வாஸ்தவம். எனக்கு மங்கவேலுவைத் தெரியாது. நான் ஸ்டேஷனில் உலாத்திக்கொண்டிருக்கும் பொழுது ஒரு ஏழை "ஐயா, நான் மிகவும் ஏழை. சாப்பாட்டுக்கு ஒன்றும் கிடையாது எனது மனைவி ஜ்வரமாயிருக்கிறாள்; குழந்தைகள் பட்டினி கிடக்கின்றன. வைத்தியத்துக்குப்பணமில்லை ; அதன் கொடுமையால் எனது மனைவி சாகிறாள்—என்றான்.

நான் மனதிறங்கி "எங்கே! வா, நானும் வருகிறேன் நீ சொல்லுவது உண்மையானல் நான் என்னாலியன்றமட்டும் உதவி செய்கின்றேன்" என்று சொன்னேன்.

அவன் முன்போக நான் பின் போனேன். பலசந்துகள் பொந்துகள் வழியாக அழைத்துக்கொண்டுபோனான். பனியானது பொழிந்துக்கொண்டிருந்தது. நான் சிந்தனையிலாழ்ந்திருந்தேன். என் கூடவந்தவன் சாகக்கிடக்கும் மனைவியையும் பட்டினி கிடக்கும் குழந்தைகளையும் பாராமல் நான் ஒன்றும் கொடுக்க மாட்டேனென்று அறிந்து என்னை ஏதோ ஒரு

சந்தில் விட்டுவிட்டுப் போய்விட்டான். நான் புதிதாகையால் வழி தெரியாமல் திண்டாடி அலைந்து கடைசியில் ஸ்டேஷன் வந்து சேர்ந்தேன். எனக்கு திரும்பி வர $2\frac{1}{2}$ மணி நேரம் பிடித்தது ஆச்சரியமில்லை. 8-45 மணிக்குள் திரும்பி வந்ததே ஆச்சரியம்.

நீதிபதி இதைக்கேட்டு ஆச்சரியமடைந்தார்.

பிறகு, "நீ கடிதங்கள் எழுதி யிருக்கிறாயே மங்கவேலுவை உனக்குத் தெரியாவிட்டால், நீ எப்படி அவனுக்கு கடிதம் எழுதினாய்" என்று கேட்டார்.

கோடீசுவரன் தான் கடிதமே எழுதவில்லை என்றான்.

நீதிபதிக்கு கோபம் வந்தது.

"என்ன ! நிரம்பப் புளுகுகிறாய்? உன் கடிதங்கள் என் கையிலிருக்கும்பொழுது நீ எப்படி இல்லையென்று சொல்லலாம்?" என்று கேட்டார்.

கோடீசுவரன் அவைகள் தன் கையெழுத்துகளல்லவென்று சொல்லி, கோர்ட்டார் முன் எழுதிக்கொடுத்தான். நீதிபதி ஆச்சரியமடைந்தார். "அப்படியானால் நீ இந்தத் தேதியில் வருவாயென்று எப்படி மங்கவேலுக்குத் தெரியும்?" என்றார்.

"அதை நான் அறியேன் என்றான்" கோடீசுவரன்.

கோடீசுவரன் பேரில் குற்றத்தை ஏற்படுத்த சரியான சாக்ஷியங்களில்லாமையால் விடுவிக்கப்பட்டான். இது வரையிலும் குற்றவாளி அகப்படவில்லை.

### The Hitch.
### சிக்கலின் சூக்ஷமம்.

இக்கேஸிலிருக்கும் சூக்ஷமத்தை போலீஸார் அறியவில்லை. தன் சொந்த முயற்சியினால் கோடீசுவரனானவன் மனோதிட முடையவனாயிருக்க வேண்டுமென்றும், அவனுக்கு மங்கவேலுவைக் கொலைசெய்ய ஒரு காரணமுமில்லையென்றும் நினைக்கவில்லை. எந்த நீதியதிபதியும் மங்கவேலுவின் சந்தேக சாக்ஷியத்தைக்கொண்டு முப்பது வருஷத்திற்கு முன் நடந்த ஒரு கொலைக்காக ஒரு கோடீசுவரனை தண்டிக்கமாட்டான். அவர்களுக்கு மங்கவேலு கொலை செய்யப்பட்டானென்றும் அதற்காக கோடீசுவரன் கைது செய்யப்பட்டிருக்கிறானென்றும் கோர்ட்டில் விசாரிக்கப்படுவதற்கு முன்னால் தெரியாதே. கோடீசுவரன் இவ்வூருக்குப் புதிதாயிற்றே ! அப்படியிருக்க முத்துவேலு முதலியார் ஹோட்டலுக்கு மங்கவேலு 10-ந்தேதியிலும் பின்னர் 16-ந்தேதியிலும் போனானென்று என்னமாக கோடீசுவரனுக்குத் தெரியும்? முத்துவேலு முதலியாருக்குத்தான் 16-ந்தேதி பாக்கெட் புஸ்தகத்தை வைத்துவிட்டுப் போனவரை 10-ந்தேதி கொன்றதாக ஒருவன் குற்றம் சாற்றப்பட்டிருக்கிறானென்று என்னமாய்த் தெரியும்? அப்படி யாராவது சொல்லியிருந்தாலும் நம்மிடம் வராமல் கோடீசுவரனிடம் போவானேன். தென்னாபிரிக்காவிலிருந்து வந்தகடிதத்தைத்தான் எழுதவில்லை யென்கிறானே. அவன் கையெழுத்தை மங்கவேலுவின் கையெழுத்தோடு ஒன்றிப் பார்ப்போம். தென்னாபிரிகாவில் எழுதின கடிதங்களின் மாதிரியை வரவழைத்துப்பார்ப்போம். இவன் நிஜமான தனபாக்கியனென்னும் கோடீசுவரன் தானாவென்று பார்ப்போம்! ஒருவேளை கொலை செய்யபபட்டது நிஜமான கோடீசுவரனும், கோடீசுவரனென்று நடிக்கிறவன் மங்கவேலுவு மாயிருக்கக் கூடாதா? என்னும் இவைகளெல்லாம் அவர்களுக்குத் தோன்றவேயில்லை.

### The Real Victim.
### நிஜமாய்க் கொலைசெய்யப்பட்டவன்.

நிஜமாய் கொலை செய்யபபட்டவன் தனபாக்கியன் என்னும் கோடீசுவரன். இந்தத் தேதியில் கோடீசுவரன் வருவானென்று மங்கவேலுவுக்கு தெரிந்திருந்ததால், அவனுக்கு வந்த கடிதங்கள் கோடீசுவரனால் தான் எழு

தப்பட்டிருக்கவேண்டும். கோர்ட்டில் கைதி எழுதிய கடிதங்களல்லவென்று ருஜுப்படுத்தப்பட்டதே ஒழிய தனபாக்கியனென்னும் கோடீசுவரன் எழுதிய கடிதங்களில்லை யென்றும் ருஜுபடுத்தப்படவில்லை. மங்கவேலுவைப்போன்ற பயங்காளிகள் கொலைசெய்வதற்குத் தகுந்த இடம் துறைமுகத்து வாராவதியின் கீழிருந்த படகே. கோடீசுவரன் இவ்விடத்திற்குப் புதிது. அவனுக்கு அவ்விடம் கொலை செய்யத்தகுந்த இடமென்று எப்படித் தெரியும்? மங்கவேலு கொலை செய்யப்படவில்லை. கோடீசுவரனாகிய தனபாக்கியன் தான் கொலை செய்யப்பட்டவன். சந்தேகமில்லாமல் நம்பிக்கை வைக்கும் அன்னியனை கொலை செய்வதற்கு அவ்விடம் தான் சரியான இடம். போலீஸார்கள் ஏமாந்தார்கள். ஏன்! அவர்கள் தனபாக்கிய னென்னும் கோடீசுவரனைக் கொன்றவனைக்கண்டு பிடிக்க யத்தனிக்காமல் மங்கவேலுவைக் கொன்றவனைக் கண்டுபிடிக்க யத்தனித்ததால் தான் முற்றும் மோசம் போனார்கள்.

### The Real Murderer.

### நிஜமான கொலையாளி.

நிஜமான கொலையாளி மங்கவேலு. ஒரு அன்னியனை அவ்விடத்தில் கொலை செய்து அவன் பையிலிருப்பவைகளைதான் எடுத்துக்கொண்டு தன பையிலிருப்பவைகளை அவன் பையில் வைப்பது அக்குடிகாரப்பேர்க்கிரியாகிய மங்கவேலுவுக்குக் கஷ்டமில்லை. அவன் புருவ முதல் க்ஷவரம் செய்துக்கொண்டு கோடீசுவரன் வேடம் போட்டு நடித்ததால் அவன் மனைவி அவனைத் தெரிந்துகொள்ளாதது அதிசயமில்லை. அதுவுமல்லாமல் மங்கவேலுவின் மனைவியும் ஷோக்காவும் தாங்கள் மங்கவேலுவைகொன்ற கொலைபாதகனைப்பாரேனென்று அவனை ஏறெடுத்துப் பார்க்கவேயில்லையென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். 16-ந்தேதி ஹோட்டலுக்குப் போய் பாக்கெட் புத்தகத்தை வேணுமென்று போட்டு விட்டுப்போனவன் மங்கவேலுவே. க்ஷவரம் பண்ணிக்கொண்ட பிற்பாடு தான் முன்னிருந்ததுபோல பொய்தாடி மீசைகளை வைத்துக்கொண்டுபோய் விட்டு வந்திருக்கிறான். 16-ந்தேதி முத்துவேலு ஹோட்டலில் மங்கவேலு டீ சாபபிட்டுவிட்டு, பாக்கெட் புஸ்தகத்தைப் போட்டு விட்டுப்போனபொழுது கோடீசுவரன் என்னபண்ணினன் என்று போலீஸார் விசாரித்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்.

"அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்."

ரத்தினம், நீ மேற்படி பழமொழியைக்கேட்டிருக்கிறாயல்லவா? அது மங்கவேலு என்னும் அந்தப்பாதகனிடம் உண்மையாக முடிந்தது. அப்பாதகன் எவ்வளவோ பொய்கள் சொல்லி கொலை புரிந்து சம்பாதித்த அப்பணத்தை அனுபவிக்கவில்லை. இக்கேஸ் முடிந்த ஆறும் மாதம் அவன் பயங்கரமான மரணத்தை அடைந்தான். இவன் ரயில்வேஸ்டேஷன் மேடையில் உலாவிக்கொண்டிருக்கும் பொழுது தவறி ரயில்வே பாதையில் விழுந்து எழுந்துக்கொள்ளுவதற்குமுன் அப்பொழுது வேகமாய் வந்துக்கொண்டிருந்த தூத்துக்குடி மெயில் வண்டியின் கீழ் அகப்பட்டு நண்ட பிண்டலாய் நசுங்கிப் போய் விட்டான். மானிடன் தான் விதைத்த விதையின் பலனைக் அறுக்காமலிருக்க மாட்டான். வினைப்பயன் யாரை விட்டது!

---

### கனம் மிஸ்டர் கோபால கிருஷ்ண கோகலேயவர்கள் தேஹ வியோகம்.

அரசர் பிரதிநிதி சட்ட நிரூபண சபையில் பிரக்கியாதி பெற்ற ஒரு அங்கத்தினரும் பப்ளிக் ஸெர்விஸ் கமிஷன் சபையில் அரசர் தம்மால் நியமிக்கப்பட்ட மெம்பர்களில் ஒருவரும், "ஸெர்வன்ட்ஸ் ஆப் இந்தியா ஸொஸைடி" ஸ்தாபகரும் அதற்குத் தலைவருமான கனம் மிஸ்டர் கோபால கிருஷ்ண கோகலேயவர்கள் பிப்ரவரிமீ 19உ வெள்ளிக்கிழமை யன்று இராத்திரி பூனாவில் காலஞ்சென்ற செய்தியைக் கேட்டு விசனிக்கிறோம். இவர் பூனா பெர்குஸன் காலேஜில் 75-ரூபாய் சம்பளத்தில் ப்ரொபெஸ்ஸராக விருந்து 25-வருஷகாலம் உழைத்த பின் 30-ரூபாய் பென்ஷன் பெற்றுக்கொண்டு துரைத்தன காரியங்களில் சிரத்தை யெடுத்துக்கொள்ளலானார். இவர் தம்முடைய பொது நலப் பிரியத்தாலும் ஸவயநயம் பாராட்டாத பரோபகார சீலத்தாலும் இந்தியாவிலும், இங்கிலாந்திலும் தென்னாப்பிரிக்காவிலும் இவருடைய பேரும் குணமும் விளங்கப் பெருமுயற்சி செய்து பிரபலமான பேரும் புகழும் பெற்றவர். இவருடைய மரணம் இந்தியாவுக்கே ஒரு பெரு நஷ்டமாயிற்று. இவருடைய ஞாபகார்த்தம் சென்னையில் பொது ஜனக்கூட்டம் கூடவேண்டுமென்று கவர்ன்மெண்டு மெம்பர்கள் உள்பட பலர் சேர்ந்து ஷெரிபுக்கு விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார்கள். மார்ச்சுமீ 4உ மீட்டிங்கு கூடும்.